

# கோவில் தூண்கள் திருவாரூரிலிருந்து சென்னைக்கு வந்த மர்மம்...

ஒரு வருஷத்துக்கு முன்பு, திருவாரூர் தியாகராஜ சுவாமி கோவிலின் வெளிப் பிராகாரத்தில் லாரிகள் சர்வ சாதாரண மாக நுழைந்து எதையோ ஏற்றிக் கொண்டு கிளம்புகின்றன. போனது என்ன? வெளிப் பிராகாரத்தில் புதைந்திருந்த வேலைப் பாடமைந்த தூண்சள்தான். இப்படி சுமார் எழுபது தூண்கள் வரை போகின்றன. எங்கே? நேரே சென்னை வி. ஜி. பி. 'வொண் டர் லேண்டு' க்குத்தான் போகின்றன. தூண் கள் கவனமாக இறக்கப்படுகின்றன. வேலைப் பாடமைந்த அந்தத் தூண்கள் மளமள வென்று தூக்கி நிறுத் தப்பட்டு வொண்டர் லேண்டில் அழகான காட்சிப் பொருட்க ளாகி விட்டன.

சரி.., அழகான வேலைப்பாடான அந்தக் கல்தூண் ஒன்று என்ன விலைக்கு வாங் கப்பட்டிருக்கும் என்கி றீர்கள்? எல்லாம் ஏறத் தாழ வெறும் அறுநூறு ரூபாய்க்குத்தான் (நிர் வாகத்தினர் சொன்ன கணக்குப்படி). திருவா ரூருக்கும் 'வி.ஜி.பி. வொண்டர் லேண்டு'க் கும் இடையில் எப்படி இப்படியொரு முடிச்சு விழுந்தது.

பிரச்னைகளை விசாரிக்கத் திருவாரூர் போனோம். ஊர்க்காரர்கள் அநேகருக்கு இந்த விஷயமே தெரியவில்லை. அரசு அதிகாரிகளி டம் சொன்னபோது, 'அப்படியா' என்று நம் மையே திருப்பி விசாரிக்கிறார்கள். அதோடு சரி. விவரம் தெரிந்திருந்தது சிலருக்கு மட் டுமே. அவர்களிடம் பேசினோம்.

அறுபத்தாறு வருஷங்களிருக்கும். அநேக வருஷங்களாகத் திருப்பணி செய்யாமல் இருந்த திருவாரூர் தியாகராஜர் கோவிலைத் திருப்பணி செய்யலாமென்றுதேவகோட்டை யைச் சேர்ந்த இரட்டை ஆரு. செட்டியார் என்பவர் பர்மாவிலி ருந்து வந்தார். வந்தவர் கோவில் உள்ளே ஒரு மண்டபம் கட்டுவதற் காக ஏராளமான கல் தூண்களைச் சிற்பிகள் மூலம் கலை அம்சங்க ளோடு அழகாக உரு வாக்கியிருக்கிறார்.

* தென்கோவன்



வேலைகளும் நடந்திருக் கின்றன. இடையில் வியாபாரத்தில் சில சங்கடங்கள் வர, திருப் பணி முயற்சி அப்ப டியே நின்று போய்விட்

-புலனாய்வுக் கட்டுரை

டது- அழகான தூண்களை அப்படியேவிட்டுப் போக மனமில்லை அவருக்கு. பின்னால் யாராவது திருப்பணி செய்தால் பிரயோஜனப்படுமே என்று வேலைப்பாடு நிரம்பிய அந்தத் தூண்களை மட்டும் கோவிலின் வெளிப் பிராகாரத்தில் குழிகள் தோண்டிப் புதைத்திருக்கிறார். மற்ற அநேக வேலைப் பாடு செய்யப்படாத தூண்கள் பிராகாரத்திலேயே கிடந்திருக்கின்றன.

பின்னால் செட்டியாரும் இறந்து போய் விட திருப்பணி நடைபெறாமலேயே அறுபத்தாறு வருஷங்கள் ஓடிவிட்டன. இப்போது இரண்டு வருஷங்களாக இருக்கின்ற கோவில் நிர்வாகம் — மறுபடியும் திருப்பணி வேலைகளை ஆரம்பித்தது. 25 லட்சத்துக்கு மேலான செலவில் திருப்பணி துவங்கி நடந்து கொண்டிருக்கிறது.

கடந்த இரண்டு வருஷங்களாகக் கோவில் தக்காராகப் பொறுப்பேற்றிருப்பவர் அ.தி.மு.க.வின் முக்கியஸ்தரான தென்கோவன். ஆர். எம். வீ.க்குச் சற்று நெருக்கமானவர். திருப்பணி வேலை ஆரம்பிக்கும்போது பலருக்கும் வெளிப்பிராகாரத்தில் கிடக்கும் தூண்கள் மீதும், புதைக்கப்பட்டிருக்கும் தூண்கள் மீதும் கவனம் திரும்பியிருக்கின்றது.

ஏற்கெனவே திருப்பணி செய்ய முயன்று நின்றுபோன தேவகோட்டைச் செட்டியார் குடும்ப வாரிசுகளே இப்போது மேலக் கோபுரத்தைத் திருப்பணி செய்யும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருப்பதால், அவர்களிடம் கலந்து பேசியிருக்கிறது கோவில் நிர்வாகம். புதைக்கப்பட்டிருந்த தூண்கள் தோண்டியெடுக்கப்பட்டிருக்கின்றன. வி. ஜி. பி. யினருக்கு எப்படியோ இந்த விஷயம் தெரிந்து விட, எழுபது தூண்கள் வரை ஏற்றி விடப்பட்டு, 48,000 ரூபாய் கோவில் நிர்வாகத்தினர் வசம் வந்திருக்கிறது. இவ்வளவு நடந்தும் கூட — ஊருக்கு வெளியில் அவ்வளவாக விஷயம் தெரியவில்லை. சிலர் பிரச்னையை எழுப்பியதோடு சரி. அதுவும் பெரிய அளவில் பேசப்படவில்லை!

திருவாரூர் முனிசிபல் சேர்மனும், முன்னாள் எம்.பி.யுமான இ.காங்கிரஸைச் சேர்ந்த சாம்பசிவம் சொன்னார். "எனக்கே இப்படிக் கோவில் தூண்கள் கொண்டு போகப்பட்ட விஷயம் தாமதமாகத்தான் தெரியும். நல்ல வேலைப்பாடமைந்த இவை செய்யப்பட்டது திருப்பணி நோக்கத்திற்குத்தான். யாருக்கோ வெளியே அனுப்ப அல்ல. இப்போது மதிப்பு வாய்ந்த அந்தத் தூண்களை விற்பதற்கு என்ன அவசியம் வந்தது? தேவகோட்டைச் செட்டியாருடைய வாரிசுகளே வந்தால்கூட, இம்மாதிரிக் குறைந்த விலையில் வெளியில் தெரியாமல் தூண்களை விற்க வேண்டிய அவசியம் தான் என்ன? விற்றதற்கு என்ன காரணங்கள் இருந்தாலும் தூண்களை விற்றது வேண்டாத விவகாரம்."

இது மாதிரி அநேகருக்குப் பட்டும் படாமலும் விஷயம் தெரிந்திருக்கிறதே ஒழிய, முழுமையாகத் தெரியவில்லை. தூண்களை வாங்கின விலை பற்றிக் கூட ஒவ்வொருவரும் ஒவ்வொரு 'ரேட்' சொல்கிறார்கள்.

சம்பந்தப்பட்ட கோவில் தக்கா

* ஆயிரங்கால் மண்டபமும், வெளியே கிடக்கும் கல் தூண்களும், அடுக்கி வைக்கப்பட்டுள்ள நெல் மூட்டைகளும்...'





* கன்னாபின்னாவென்று கிடக்கும் சிலைகள்...'



* பிராகார ஓரங்களிலெல்லாம் நெல் மூட்டைகள் தான்!

ரான தென்னவனைப் பார்த்தோம். தூண்கள் விற்கப்பட்டது குறித்துக் கேட்டபோது, "விற்றது முன்பு திருப்பணி செய்ய முயன்ற இரட்டை ஆரு. செட்டியாருடைய வாரிசுகள்தான். விற்று, பணத்தைக் கோவில் நிர்வாகத்தினரிடம் கொடுத்து விட்டார்கள். தூண்களுக்காக எங்களிடம் 48,000 ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கின்றது. இந்தத் தூண்களை வி. ஜி. பி. வாங்கினதே பெரிய விஷயம். இங்கிருந்து தூண்களைக் கொண்டு போவது லேசான விஷயமா என்ன? இன்னும் கிடக்கிற தூண்களையும் விற்க முயற்சி நடக்கின்றது" என்றார் அவர்.

திருவாரூர்க் கோவிலின் பரம்பரை டிரஸ்டியாக இருந்து தற்போது விலகியிருக்கும் வி. எஸ். தியாகராஜ முதலியார் குடும்பத்தினரது வீட்டில் சிலரிடம் பேசிக் கொண்டிருந்த போது, "விற்றது தெரியும். ஆனால் என்ன தொகைக்கு விற்கப்பட்டது என்கிற விவரமெல்லாம் தெரியவில்லை" என்றார்கள்.

உள்ளூரிலேயே இருக்கிற தி. மு. க. பிரமுகரான தென்னனைப் பார்த்தோம். நாம் கேட்டதும் விரிவான தகவல்களைச் சொன்னார், தென்னன். "திருப்பணியை முன்பே நடத்த ஆரு. செட்டியார் ஒரு குறிப்பிட்ட தொகையைக் கோவிலில் 'டெபாசிட்டே' பண்ணியிருந்தார். இருந்தாலும் ஏதோ காரணத்தால் திருப்பணி நின்றுபோய்விட்டது. சில தூண்களைப் புதைத்து விட்டுப் பலவற்றை மூன்றும் பிராகாரத்திலேயே போட்டுவிட்டுப் போய்விட்டார்கள். கிடந்தவை எல்லாம் வலுவான தூண்கள். இப்போது புதைந்து கிடந்தவற்றை மட்டும் 48,000 ரூபாய்க்கு விற்றதாகச் சொல்கிறார்கள். ஆனால், சிற்ப வேலைப்பாடமைந்த—நீள வாக்கில் அமைந்த கற்களின் மதிப்பு அவ்வளவுதானா? 75 வது வருஷத்தின் போது வெளியே கிடந்த வேலைப்பாடில்லாத கல்தூண்களின் மதிப்பை இஞ்ஜினியர்கள் கணித்ததே மூன்று லட்சம் ரூபாய்க்கு. 75 லேயே அதனுடைய மதிப்பு மூன்று லட்சம் என்றால் இப்போது அதன் மதிப்பு எவ்வளவு ஏறியிருக்கும்? ஆனால் வெறுமனே 48,000 ரூபாய்க்கு வி. ஜி. பி. க்கு விற்றிருக்கிறார்கள். ஆளும் கட்சிக்காரர்கள் சம்பந்தப்பட்ட விஷயம் என்பதால் சரியான தகவல் வெளி வராமல் ரகசியமாகவே அந்த வேலை முடிந்துவிட்டது" என்றார்.

கோவிலை ஒரு சுற்றுச் சுற்றினோம். திருப்பணி வேலை நடந்து கொண்டிருந்தது. வெளி பிராகாரத்தில் இன்னும் நிறையத் தூண்கள் எண்கள் எழுதப்பட்டுத் தாறுமாறாகக் கிடந்தன. சில இடங்களில் நெல் மூட்டைகள் வரிசையாக அடுக்கப்பட்டு, நெல் கிட்டங்கி மாதிரி கோவிலின் பல இடங்கள் காட்சியளித்தன. இதனால் வருஷத்திற்கு 40 ஆயிரம் ரூபாய் வருமானம் கிடைக்கிறது என்றார்கள் நிர்வாகத்தினர். சில இடங்களில் நந்தி மாதிரியான சிலைகள் கூட பிராகாரத்தில் கிடந்தன. மூன்றும் பிராகாரத்தில் பாதி மண்டபம் எழும்பினபடி, கற்கள் மட்டும் நின்று கொண்டிருக்க ஒரு மண்டபம். அந்தப் பிராகாரத்திற்குள் லாரிகள் சிரமப்பட்டு உள்ளே வந்து சாமான்களை இறக்கிக்கொண்டிருந்தன. தூண்களும் இப்படிச் சிரமப்பட்டுத்தான் கொண்டு போகப் பட்டதாகச் சொன்னார்கள்.


* சாம்பசிவம். * தென்னன்.

"ஏற்கெனவே விற்றது போக, இப்போது சிதறிக் கிடக்கிற தூண்களை ஒரு லட்சம் ரூபாய்க்கு விற்க நினைக்கிறது கோவில் நிர்வாகம். ஆனால் முன்பு திருப்பணி செய்ய முயன்ற ஆரு. செட்டியார் வாரிசுகளுக்கு இதில் சம்மதமில்லை. அதனால் பிரச்னை உருவாகி செட்டியார் வாரிசுகள் நிர்வாகத்திடம் கோபித்துக் கொண்டு போய்விட்டார்கள். 75 லேயே மூன்று லட்சத்திற்கு மதிப்பிடப்பட்ட தூண்களை, அதுவும் இவ்வளவு காலமான பிறகு வெறுமனே ஒருலட்சம் ரூபாய்க்கு விற்க அவர்கள் எப்படிச் சம்மதிப்பார்கள்? ஆகவே தூண்கள் இன்னும் அப்படியே பிரச்னையாய்க் கிடக்கின்றன" என்றார்கள் கோவிலைப் பற்றி நன்கு அறிந்த சிலர் நம்மிடம்.

தூண்கள் பிரச்னையே இந்த அளவில் இருக்க, இப்போது அடுத்தபடியாக இன்னொரு பிரச்னையும் உருவாகிக் கொண்டிருக்கிறது. கோவிலின் வெளிப் பிராகாரத்தில் இப்போது ஒரு பெரிய மண்டபம் கட்டப்பட்டுக் கொண்டிருக்கிறது. பெரும்பாலான வேலைகள் முடிவடைந்துவிட்டன. பதினைந்து லட்சம் ரூபாய் செலவாகியிருக்கிறது. சுற்றிலும் காங்கிரீட் போடப்பட்டு வலுவாகக் கட்டப்பட்டு வருகிறது.

எதற்காக இப்படியொரு மண்டபம்? தஞ்சாவூர் மாவட்டத்தில், சுற்றியுள்ள கிராமங்களிலிருக்கும் பாதுகாப்புக் குறைந்த கோயில் சிலைகளை மொத்தமாய்க் கொண்டு வந்து பாதுகாக்க, இப்படியொரு மண்டபம் என்கிறார்கள். இப்போது நிறையச் சிலைகள் வர ஆரம்பித்துவிட்டன. ஒதுங்கின ஒரு கூடத்தில் வதவதவென்று நடராஜர், அம்மன் சிலைகள். "இன்னும் ஐயாயிரம் சிலைகள் வரை வர வாய்ப்பிருக்கிறது" என்கிறார்கள் நிர்வாகத்தினர்.

சிதம்பரத்தில் முன்பு ஒரு காலத்தில் படையெடுப்பு நிகழ்ந்தபோது நடராஜர் சிலை திருவாரூருக்குக் கொண்டு வரப்பட்டு முப்பது

* வி. ஜி. பன்னீர்தாஸ்.



"வெறுமனே கிடந்த கற்களுக்கு உயிர் கொடுத்ததே நான் தான்!"

பிரச்னையோடு சம்பந்தப்பட்ட வி. ஜி. பன்னீர்தாஸை வீட்டில் பார்த்தபோது:

"திருவாரூரிலிருந்து கல் கொண்டு வந்ததெல்லாம் உண்மை தான். திருப்பணி நிதிக்காக ஐம்பதாயிரம் ரூபாய் வரை கொடுத்து விட்டுத்தான் கற்களை எடுத்து வந்தேன். வெறுமனே உள்ளே புதைக்கப்பட்டுக் கிடந்த கற்களுக்கு உயிர் கொடுத்ததே நான் தான்!

"கோவிலோடு சம்பந்தப்பட்ட செட்டியார்தான் எனக்குக் கடிதம் எழுதினார். நாங்கள் போனோம். வெளியே வேலைப் பாடில்லாத கற்கள் கிடந்தன. அவற்றையெல்லாம் 'வேண்டாம்' என்று சொல்லிவிட்டோம். புதைந்து கிடந்த வேலைப்பாடான கற்களை மட்டும் எடுத்துக் கொண்டு வந்தோம். கோவில் நிர்வாகத்தினர் சகல வசதிகளையும் செய்து தந்தார்கள். கொண்டு வருவதற்கே ஏகப்பட்ட செலவு.

"நான் அந்தக் கற்களைக் குறைந்த விலைக்கு வாங்கினதாக நீங்கள் சொல்லலாம். அதை நான் வாங்கியிருக்காவிட்டால் வேறு யார் வாங்கியிருப்பார்கள்? அவை அப்படியேதான் கிடந்திருக்கும். சார்... நான் கலை உள்ளம் கொண்டவன். அதனால் தான் அங்கே கிடந்தவற்றை எடுத்து வந்து வி. ஜி. பி. 'வொண்டர் லாண்டில்' உபயோகித்திருக்கிறேன். இப்போது எவ்வளவு பொருத்தமாக இருக்கின்றது பாருங்கள்.

"நீங்கள் உட்கார்ந்திருக்கிற இடத்தில் இருக்கிற தூண் நாற்பது ரூபாய்க்கு வாங்கினது. நம்புவீங்களா, நீங்க? நம்ப மாட்டீங்க? கோல்டன் பீச் எதிரே இருக்கிற மியூஸியத்திலே இருக்கிற தூணெல்லாம் மாயவரத்திலே, ஒரு ஆதீனத்திலே இருந்து கொண்டு வந்தது. அவர்களுக்கு அதனோட அருமை தெரியலே. 'லீகலாக'த்தானே வாங்கியிருக்கிறேன். இதற்கான ஆதாரங்கள் என்னிடம் இருக்கின்றன. 'திருவாரூர் கோவிலி லிருந்து தூண்களை வி. ஜி. பி.க்கு விற்றுவிட்டார்கள்' என்கிற நியூஸ் வெளியே போனாப் போதும். உடனே 'காண்ட்ரவர்ஸியா' போய்விடும். பெரிய பிரச்னையாயிடும். அதுவும், ஜூன்லே 'வொண்டர் லாண்ட்' திறக்கிற நேரத்திலே, ஏன் சார்... அனாவசியக் குழப்பம்...? அதனாலே வேற விஷயம் எழுதுங்க. இதை அப்படியே விட்டுடுங்க சார்."

—— என்றார் வி. ஜி. பி. சற்று கலிப்பேறிய முகத்துடன்.

வருஷங்கள் வரை இருந்ததாம். அந்த ஞாபகமாக இன்னும் சிதம்பரம் கோவிலில் நடராஜருக்கு திருவாரூர் கோவில் சார்பில் தினமும் விசேஷ அர்ச்சனை நடக்கிறது. இதை நிர்வாகத்தினர் பெருமையாகச் சொல்லிக் கொண்டாலும், சுற்றியுள்ள கிராமக் கோவில் நிர்வாகிகளை, அர்ச்சகர்களை விசாரித்தபோது நிலைமை அவ்வளவு திருப்திகரமாக இல்லை.

"திருவாரூர்க் கோவிலில் கொண்டு போய்ச் சிலைகளை வைத்துவிட்டால், திருப்பித் திருவிழாவின் போது மட்டும் போலீஸ் காவலோடு சிலையை எடுத்து வந்து திரும்பவும் கொண்டு போய் வைத்து விட வேண்டுமென்கிறார்கள். தூண்களையே குறைந்த விலைக்கு விற்றவர்கள் சிலைகளை வெறுமனே விட்டு வைத்து விடுவார்கள் என்று எப்படிச் சொல்ல முடியும்? அரசியல்வாதிகள்தானே கோவிலை நிர்வகிக்கிறவர்களாகவும் இருக்கிறார்கள். பாதுகாப்பு இல்லையென்று மொத்தமாக ஒரே இடத்தில் கொண்டு போய் வைக்கும்போது சிலைகள் பாதுகாப்பாக இருக்கும் என்பதற்கு என்ன உத்திரவாதம்? சிலைகளை மாற்றிவிடவும் வாய்ப்புண்டு இல்லையா?" என்றார்கள், சில அர்ச்சகர்கள் நைந்த குரலில். கோவில் சிலைகளைக் கொண்டு போய் அபிஷேகம் எதுவுமில்லாமல் இப்படித் தனியாக வைக்கும்போது சிலைகளிடத்தில் ஒருவித **metal cancer** மாதிரியான பாதிப்பு வர வாய்ப்பிருக்கிறது என்பது பலரது அபிப்ராயம். கோவில் நிர்வாகத்தில் அரசியல் புகுந்ததால்தான் இவ்வளவும் என்று முணுமுணுக்கிறவர்களே திருவாரூரில் அதிகம். இதே நிலைமை நீடித்தால் நாளடைவில் தெருவில் இருக்கிற சிலைகள் கையில் கட்சிக் கொடி கொடுக்கிற மாதிரி, உட் பிராகாரத்தில் இருக்கிற சிலைகளின் கையில்கூட கட்சிக் கொடியைக் கட்டிவிட்டாலும் விடுவார்கள் போலிருக்கிறது!

— ஜூலி

படங்கள்: பாணு மணாளன்

# ஃபாரெக்ஸ்® முதன்முதல் தேர்வு!

## ஏனெனில் புதிய மேம்பட்ட ஃபாரெக்ஸ்® முதன்முதலாக திட உணவிற்கு மாறும் குழந்தைக்கென இன்றியமையாத உட்பொருள்கள் சரியான அளவுகளில் சேர்க்கப்பட்டதாகும்.

குழந்தையின் வளர்ச்சிக்கும் மென்மையான செரிக்கும் சக்திக்கெனவும் சரியான அளவில் புரதங்களும் கொழுப்புச் சத்துக்களும் அடங்கியதாகும் ஃபாரெக்ஸ்.

குழந்தையின் இரத்தத்தை ஆரோக்கியமாக வைக்க இதில் போதுமான அளவு இரும்புச் சத்தும் உள்ளது.

குழந்தையின் எலும்புகளும் பற்களும் திடமாக வளருவதற்கு உகந்த விகிதத்தில் கால்ஷியம்-ஃபாஸ்ஃபரஸ் அடங்கியதாகும் ஃபாரெக்ஸ்.

இவை தவிர, புதிய ஃபாரெக்ஸ் கலப்பதற்கு எளிதானது...சுவைமிக்கது.




பால் சேர்க்கத் தேவையில்லை!
நீருடன் கலந்து கொடுத்தால் போதும்.

புதிய மேம்பட்ட ஃபாரெக்ஸ்®

CLARION/B/GX/13/203 TMA



# எஸ்.டி.எஸ்ஸின் எதிர்பார்ப்பு:

# எம்.ஜி.ஆர்

எம்.ஜி. ஆர். மீதான ஊழல் பட்டியல் கவர்னரிடம் தரப்பட்ட நாளான 29.4.86 இரவு மணி ஒன்பதே முக்கால். பத்து மணிக்கு வரச் சொல்லியிருந்தார் எஸ். டி. சோமசுந்தரம். நந்தனத்தில் உள்வாங்கினாற்போல் வீடு. நமது கழகக் கொடிகள் கட்டின வேன்கள்; கார். சுமார் இருபது இருபத்தைந்து தொண்டர்கள். வீட்டினுள் நுழைகையில், மர நாற்காலி ஒன்றில் குத்துக்காலிட்டது போல் கால்களைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருந்தார் எஸ்.டி.எஸ். வெள்ளை வேஷ்டி; பனியன். தமக்கே உரிய சாந்தமான குரலில் பதில்களைத் தருகிறார்.

கேள்வி: முன்பு கருணாநிதி மீது எம்.ஜி.ஆர் கொடுத்த ஊழல் பட்டியலுக்கும், நீங்கள் இப்போது எம்.ஜி.ஆர். மீது கொடுத்துள்ள ஊழல் பட்டியலுக்கும் என்ன வித்தியாசம்?

எஸ்.டி.எஸ்: ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. 'ஒருவனின் உண்மையான குணத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் அவனுக்குப் பதவி கொடுத்து, எப்படிச் செயல்படுகிறான் என்று பார்' என்று. எம்.ஜி.ஆர். கருணாநிதி மேல் என்னென்ன குற்றச்சாட்டுகளைச் சொன்னாரோ, அதே மாதிரியான ஊழல் வேலைகளை இவர் பதவிக்கு வந்ததும் செய்ய ஆரம்பித்துவிட்டார். ஊழலை ஒழிக்க வேண்டும் என்கிற ஒரே நோக்கம்தான் என்னை இந்த ஊழல் பட்டியலைத் தயாரித்து அளிக்க வைத்ததே தவிர வேறு எந்தவிதமான நோக்கமும் இல்லை.

கே: ஊழல் பட்டியல் எம்.ஜி.ஆர். மீது மட்டும்தானா? இல்லை அமைச்சர்கள் மேலும் உண்டா?

எஸ்.டி.எஸ்.: முதலமைச்சர், அமைச்சர்கள் எல்லார் மீதும்தான். எல்லாருமே ஊழல் செய்திருக்கிறார்களே!

கே: ஊழல் சம்மந்தமான விவரங்கள் எல்லாம் உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?

எஸ்.டி.எஸ்.: நான் அவர்கள் அமைச்சரவையில் இருந்தவன்தானே! சக அமைச்சர்களும் முதலமைச்சரும் எப்படி எப்படியெல்லாம் முறைகேடாய் நடக்கிறார்கள் என்பது தெரியாமல் போய்விடுமா? அது தவிர வேறு பலரும் சொன்ன குற்றச் சாட்டுகளும் அதில் இடம் பெற்றுள்ளன!

கே: எல்லாவற்றுக்கும் ஆதாரம் வைத்திருக்கிறீர்களா?

எஸ்.டி.எஸ்: ஓ! வைத்திருக்கிறேன். தேவையான சமயத்தில், தக்க இடத்தில் அவற்றை வெளியிடுவேன்.

கே: பத்திரிகைகளுக்கு ஊழல் பட்டியலின் பிரதி தருவீர்களா?

எஸ்.டி.எஸ்.: கவர்னரிடம் ஊழல் பட்டியலைத் தந்தபோது, "இவை பற்றி ஒரு முடிவு எடுக்கப்படும் வரை வெளியே தெரிய வேண்டாம்" என்றார். நானும் 'பட்டியலில் இடம் பெற்றிருப்பவற்றை ரகசியமாக வைத்திருக்கிறேன்' என்று சொல்லியிருப்பதால், பத்திரிகைகளுக்கு ஊழல் குற்றச்சாட்டுகள் பற்றிய எந்த விவரமும் தருவதற்கில்லை.

கே: உங்கள் குற்றச்சாட்டுகளின் பேரில் கவர்னர் என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறார்?

எஸ்.டி.எஸ்.: பட்டியலை குடியரசுத் தலை

வருக்கு அனுப்புவதாய்ச் சொல்லியிருக்கிறார். அவர் பிரதமருக்கு அனுப்புவார்.

கே: பிரதமர் என்ன நடவடிக்கைகள் எடுப்பார் என்று எதிர்பார்க்கிறீர்கள்?

எஸ்.டி.எஸ்.: ஊழல், லஞ்சம் இல்லாத சுத்தமான அரசாங்கம் பற்றிப் பிரதமர் ராஜீவ் காந்தி அடிக்கடி வற்புறுத்தி வருகிறார். இப்போது ஒரு மாநிலத்தின் முதல்வரும், அமைச்சர்களும் எப்படியெல்லாம் ஊழல் செய்து, லஞ்சம் வாங்கியிருக்கிறார்கள் என்று நான் விளக்கமாய் மகஜர் கொடுத்திருக்கிறேன். அதன் மேல் நிச்சயம் நடவடிக்கை எடுத்து, விசாரணைக் கமிஷனுக்கு உத்தரவிடுவார் என்று எதிர்பார்க்கிறேன்.

கே: ராஜீவ் நடவடிக்கை எடுக்காவிட்டால் அவரை நடவடிக்கை எடுக்கும்படி வற்புறுத்துவீர்களா?

சில காலத்திலேயே எம்.ஜி. ஆர். நோய் வாய்ப்பட்டு, ஆஸ்பத்திரிக்குப் போய்விட்டார். அப்புறம் அமெரிக்காவில் சிகிச்சை. திரும்பி வந்த பிறகு கூட அவரது உடலின் வலிமை, மனோ நிலை பற்றி எனக்குச் சந்தேகம். இதற்கிடையில் மறுபடி அமெரிக்காவில் செக்—அப்புக்குப் போய்விட்டார். ஆனால் சமீபத்தில், பொதுக் குழு, ஆட்சி மன்றக் குழுவில் அவரது நடவடிக்கைகள் பற்றி அறிந்த போது , மறுநாள் பொதுக் கூட்டத்தில் நாலு பேர் தூக்கிக் கொண்டு வந்த மாலையை அணிந்து கொண்டு, சர்வ சாதாரணமாய்ச் சுழற்றிய பின்பு, அவர் திடகாத்திரமாய்த்தான் இருக்கிறார் என்று முடிவு செய்தேன். நடிகை வெண்ணிற ஆடை நிர்மலாவுக்கு எம்.எல்.சி. பதவி தந்தவுடன், அவர் பழைய சினிமா சம்பந்தமான விஷயங்களை மறக்கவில்லை என்று முடிவு செய்தேன்.

# அமைச்சரவை மீது விசாரணைக் கமிஷன்!

எஸ்.டி.எஸ்.: மகஜர் கொடுத்ததுமே, நடவடிக்கை எடுக்க மாட்டார் என்று நாமாகவே ஏன் கற்பனை செய்து கொள்ள வேண்டும்?

கே: கட்சியில் இருக்கும் போதே இந்தப் புகார்களை எம்.ஜி. ஆரிடமே கொடுத்திருக்கலாமே?

எஸ்.டி.எஸ்: நான் இந்தக் குற்றச் சாட்டுகளையெல்லாம் எம்.ஜி. ஆரிடம் எடுத்துச் சொல்லியிருக்கிறேன். தவறுகளைச் சுட்டிக் காட்டியிருக்கிறேன். அவர், 'நமது நலனுக்குத்தான் எஸ்.டி.எஸ். சொல்கிறார்' என்று புரிந்து கொள்ளாமல் 'இந்த மனிதர் கட்சியில் இருப்பது நமக்கு ஆபத்து, தலைவலி...' என்று முடிவு செய்து, கட்சியிலிருந்து வெளியேற்றினார். உண்மையான ஊழியனுக்குத் தரப்பட்ட பரிசு அது. நானும் எக்ஸைஸ், கமர்ஷியல் டாக்ஸ், வருவாய்த் துறை என்று மிக முக்கியமான துறைகளில் அமைச்சராய் இருந்திருக்கிறேன்; தில்லு முல்லு செய்து பணம் சம்பாதிக்கவில்லை! அதனால்தான் ஊழல்காரர்களைச் சுட்டிக்காட்டி குற்றம் சுமத்த எனக்குத் தைரியமும் இருக்கிறது.

கே: கட்சியை விட்டு வெளியேற்றப்பட்டவுடனேயே ஊழல் பட்டியலைத் தந்திருக்கலாமே! ஏன் இத்தனை நாள் மௌனம்?

எஸ்.டி.எஸ்.: நான் வெளியேற்றப்பட்ட குடும்ப வக்கீல் ராகவாச்சாரியை எம்.எல்.சி யாக்கினதும் குடும்ப விஷயங்களையும் மறக்கவில்லை என்று புரிந்து கொண்டேன். உடலிலும், மனத்திலும் திடமில்லாதவர் மீது குற்றம் குறை சொல்வது தமிழர் பண்பாடல்ல, என்று கருதி, இத்தனை நாளும் ஊழல் குற்றச் சாட்டுக்களைக் கொடுப்பதைத் தள்ளிப் போட்டு வந்த நான், இனியும் தாமதிக்கக் கூடாது என்று முடிவெடுத்து கவர்னரைச் சந்திக்க நாள் கேட்டேன்.

கே: முதல்வர், அமைச்சர்கள் மீது குற்றச் சாட்டுக்கள் சமர்ப்பித்துள்ளீர்கள். அ.தி.மு.க.வில் வேறு யாரும் ஊழல் செய்யவில்லையா?

எஸ்.டி.எஸ்.: தலை ஒழுங்காய் இருந்தால், வால் தன்னால் ஒழுங்காக இருக்கும்.

கே: இந்த ஊழல் பட்டியல் தரப்பட்டுள்ளது குறித்து எம்.ஜி. ஆரின் 'ரியாக்ஷன்' என்னவாக இருக்கும்?

எஸ்.டி.எஸ்: முதல் தடவை திருடுகிறவன் கண்டு பிடிக்கப்பட்டுவிட்டால் பயப்படுவான். ஆனால் பலமுறை திருடினவனுக்கு உறைக்காது. எம்.ஜி. ஆர். இது பற்றி எல்லாம் 'சீரியஸாய்' எடுத்துக் கொள்ள மாட்டார்.

பேட்டி: **நமது நிருபர்**.




# கல்கி

1986 மே 11
மலர் 44 இதழ் 41
அக்ஷய சித்திரை 28




# சபாஷ் பர்னாலா! பலே ரிபைரோ!

பொற்கோயிலில் மீண்டும் புகுந்து கொண்டு அதனைத் தங்கள் கோட்டையாக்கிக் கொள்ள முயன்ற சீக்கிய பயங்கரவாதிகளை வெளியேற்றப் போலீஸை ஏவிய முதலமைச்சர் பர்னாலாவை வாழ்த்துகிறோம். அவர் துணிவைப் பாராட்டுகிறோம். தேச பக்திக்குத் தலை வணங்குகிறோம்.

இந்தப் போலீஸ் நடவடிக்கையை மிகத் துரித காலத்தில் மிகமிகக் குறைந்தபட்ச உயிர்ச்சேதத்துடன் நடத்தி, பொற்கோயிலைப் பயங்கரவாதிகளிடமிருந்து விடுவித்து, அதன் நியாயமான உரிமையாளரான சிரோமணி குருத்வாரா பிரபந்தக் கமிட்டியிடம் ஒப்படைத்த போலீஸ் டைரக்டர் ஜெனரல் ரிபைரோவின் ஆற்றலுக்குப் பலே போடுகிறோம்; சபாஷ் சொல்லுகிறோம்! ராணுவம் தயார் நிலையில் இருந்தும் அதை அழைக்க அவசியமில்லாமல் போய்விட்டது! துணைக் காவல் படையினரும், அதிரடிப் 'படையினரும் போலீஸுக்கு உதவ, போலீஸ் நடவடிக்கையே காரியத்தைச் சாதித்துவிட்டது! முந்நூறுக்கு மேற்பட்ட பயங்கரவாதிகள் சுற்றி வளைக்கப்பட்டுக் கைதாகியுள்ளனர்.

பர்னாலா பதவிக்கு வந்ததும் அன்பினால் தீவிரவாதிகளை வசப்படுத்திவிடலாம் என்று எண்ணினார். ஆனால் அந்த நல்லெண்ணம் எதிர்பார்த்த எதிரொலியைப் பயங்கரவாதிகள் உள்ளத்தில் ஏற்படுத்தவில்லை! இதற்கிடையில் பயங்கரவாதிகளில் பலர் மீண்டும் பொற்கோயிலை ஆக்கிரமித்துக் கொண்டனர். இவர்களிடமும், இதர பயங்கரவாதிகளிடமும் கடுமையாக நடந்து கொள்ள முடியாமல் தவித்தார் பர்னாலா. 'பயங்கரவாதிகள் என்றாலும் சகோதர சீக்கியராயிற்றே, சீக்கிய மக்கள் என்ன நினைப்பார்களோ?' என்று தயங்கினார்.

ஆனால் பயங்கரவாதிகளின் ஐந்து உறுப்பினர் 'அடங்கிய மார்க்கக் குழு, காலிஸ்தான் அமைந்துவிட்டதாகவும், காலிஸ்தான் அரசு இனி ஆட்சி புரியும் என்பதாகவும் கூறியது பர்னாலாவுக்கு வசதியாகப் போயிற்று. பயங்கரவாதிகளின் இந்த அறிக்கையே அவர்கள் மீது தீவிர நடவடிக்கை எடுக்க நல்ல காரணத்தை அளித்தது!

முன்பு, 'புளூ ஸ்டார்' நடவடிக்கையை இந்திராகாந்தி உத்தரவின் பேரில் ராணுவம் மேற்கொண்ட போது, பரவலாகச் சீக்கிய மக்களிடம் தோன்றிய எதிர்ப்பும், வெறுப்பும் இப்போது ஏற்பட வாய்ப்பு இல்லை. காரணம், ராஜீவ் காந்தி தீர்க்க தரிசனத்துடன் தேர்தலை நடத்தி மக்களின் பேராதரவுடன் அகாலிதளம் பதவிக்கு வர வழி வகுத்ததுதான். இப்போது சீக்கிய பயங்கரவாதிகள் மீது அகாலிதளமே நடவடிக்கை எடுக்க வேண்டிய நிர்ப்பந்தம். இதில் மக்களிடையே மனக்கசப்பு வளர இடமில்லை. பிரதமரும் பர்னாலாவைத் தட்டிக் கொடுத்துப் பாராட்டி விட்டார்.

நிலைமை இவ்வாறிருக்க, அகாலிதளத்தின் செயற்குழுவிலிருந்து தோரா, பாதல் இருவரும் ராஜினாமாச் செய்திருப்பதும், இரு அமைச்சர்களையும் தூண்டிவிட்டுப் பதவியிலிருந்து விலகச் செய்திருப்பதும் மிகவும் வருந்தத் தக்கது. பர்னாலா அரசுக்குப் பக்கபலமாக நின்று பயங்கரவாதிகளை ஒடுக்க வேண்டிய இத்தருணத்தில் கட்சியிலும், சீக்கிய மக்களிடையேயும் பிளவை உண்டாக்க முயல்வது ஏற்கெனவே பிரபலமான இவ்விருவரது சுயநல நோக்கங்களையே அடிக்கோடிட்டுக் காட்டுகிறது. இவர்களுடைய இந்தப் போக்கு பயங்கரவாதிகளின் நேரடித் தாக்குதலைவிடக் கேவலமான — முதுகில் குத்துகிற காரியம்.

ஆனால் பஞ்சாபின் பெரும்பான்மை சீக்கிய மக்கள் இந்தக் கபட நாடகத்தை இனம் கண்டு கொள்வார்கள் என்பதிலும் பர்னாலாவுக்கு முழு ஆதரவு தந்து பஞ்சாபின் அமைதியையும் பாரதத்தின் ஒருமைப்பாட்டையும் பாதுகாப்பார்கள் என்பதிலும் சந்தேகமேயில்லை.

ரிபைரோ தலைமையில் நடந்த வெற்றிகரமான போலீஸ் நடவடிக்கையில் ஒரு திருஷ்டிப் பொட்டு, மார்க்கக் கமிட்டியைச் சேர்ந்த ஐவரும் தப்பிவிட்டதுதான். அவர்கள் கைதாகும் வரை நிம்மதியில்லை. விஷப்பூண்டின் வேரைக் கெல்லி எடுத்துச் சுட்டுப் பொசுக்கியாக வேண்டும்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

* திருராமேஸ்வரம் கோயில்.

# "எங்கள் கிராமத்து இளைஞர்களுக்குப் பெண் கொடுக்கவே பயப்படுகிறார்கள்..."

இராமபிரான் இராமேஸ்வரத்தில் மட்டும்தான் சிவபெருமானை வழிபட்டார் என்பதில்லை. இன்னோர் இடத்திலும் வழிபட்டிருக்கிறார். அதுதான் தஞ்சை மாவட்டம் மன்னார்குடி தாலுகாவிலுள்ள திருராமேஸ்வரம் என்று தல வரலாறு கூறுகிறார்கள். தல வரலாறு எப்படியிருந்தாலும் பிரம்மாண்டமான அந்தக் கோயிலும், அதையொட்டியுள்ள ரம்மியமான திருக்குளமும் பார்க்கப் பார்க்கப் பரவசமூட்டுபவை. அந்தக் கோயிலுக்கு ராஜராஜ சோழனே மானியம் எழுதி வைத்திருப்பதாக அங்குள்ள கல்வெட்டுக் கூறுகிறது. இதோடு யாரோ ஒரு மன்னன் அந்தக் கோயிலின் எதிர்காலத் திருப்பணிக்காக ஏராளமான தங்கங்களையும், வைர வைடூரியங்கள் போன்ற விலையுயர்ந்த மணி வகைகளையும் அந்தக் கோயிலுக்குள்ளேயே புதைத்து வைத்திருப்பதாக இன்னொரு கல்வெட்டுக் கூறுகிறதாம். அதனால் அந்தப் புதையல் இருக்கலாமென்று சந்தேகப்படும் ஓரிடத்தைப்

பத்திரமாகப் பூட்டியும் வைத்திருக்கிறார்கள்.

இப்படியெல்லாம் அந்தக் கோயிலின் மகிமைகளைப் பற்றிக் கேள்விப்பட்டவுடன், உடனடியாகப் புறப்பட்டுச் சென்று அந்தத் தலத்தைத் தரிசித்து வரத் தோன்றுகிறதல்லவா; அதுதான் நடக்காது! பஸ் வசதியோ அல்லது சரியான ரோடு வசதியோகூட இல்லாத ஓரிடத்திற்கு எப்படிச் சென்று வர முடியும்?

திருவாரூரிலிருந்து மன்னார்குடி செல்லும் சாலையில் (அது மட்டும் என்ன வாழுகிறதாம்!) லெட்சுமாங்குடியில் இறங்கிக் கூத்தாநல்லூர் வழியாகச் சுமார் ஆறு கி.மீ.க்கு மேல் நடந்து சென்றால்தான் திருராமேஸ்வரத்தை அடையலாம். கோடை முற்றுத காலங்களில் அப்படி நடந்து சென்றால் சரித்திரக் கதைகளில் படிக்கிற மாதிரி வழியில் ஆங்காங்கே தென்படும் தாமரைத் தடாகங்களில் தாக சாந்தி செய்து கொண்டு களைப்பாறிச் செல்லலாம். இல்லையென்றால் கூத்தாநல்லூரிலிருந்து மாட்டு வண்டியொன்றை வாடகைக்குப் பிடித்துக் கொண்டு போய் வரலாம்; அவ்வளவுதான்.

நாங்கள் சைக்கிளில் சென்றோம். சென்றவுடனேயே எங்கள் சைக்கிள் சக்கரங்களுக்கு மறுபடியும் காற்றுப் பிடிக்க வேண்டியதாயிற்று. அப்படியொரு காட்டுப் பாதை அது! அந்தப் பாதையும் அரசோ அல்லது பஞ்சாயத்து யூனியனோ போட்டது அல்ல. அதிகாரிகளுக்கும் அரசியல்வாதிகளுக்கும் மனு மேல் மனுவாக எழுதிக் கொடுத்துச் சலித்துப் போன கிராம மக்களே ஒன்று சேர்ந்து 1962ல் அவர்களாகவே சிரமதான முறையில் போட்டுக் கொண்ட பாதை.

ஏறத்தாழ நான்காயிரம் மக்கள் தொகை கொண்ட அந்தக் கிராமத்தில் கடை கண்ணி என்ற சங்கதியெல்லாம் இடையாது. எது வாங்க வேண்டுமானாலும் ஐந்து கி.மீ. தூரத்திற்கு அந்தக் கரடு முரடான பாதையில் பயணம் செய்து கூத்தாநல்லூருக்குத்தான் செல்ல வேண்டும். இந்த நிலையில் மருத்துவ வசதி போன்ற மற்ற வசதிகள் பற்றிக் கேட்கத்தான் வேண்டுமா, என்ன!

எப்போதோ பன்னெடுங்காலத்திற்கு முன்பு கட்டப்பட்ட தாய்—சேய் நல விடுதி இன்னமும் திறக்கப்படாமல் பாழடைந்து கிடக்கிறது. அதனால் ஏழைப் பெண்கள் கர்ப்பம் தரிக்கவே பயப்படும் நிலை. இதை ஏதோ கிண்டலுக்காகச் சொல்வதாய் யாரும் நினைக்க வேண்டாம். "எங்களூரில் சாலை வசதி, மருத்துவ வசதி போன்ற எந்த வசதியுமே இல்லாததால் எங்களூர் இளைஞர்களுக்கு வெளியூர்க்காரர்கள் பெண் கொடுக்க மறுக்கிறார்கள்!" என்று மனம் நொந்து சொன்னார் அவ்வூர் வார்டு உறுப்பினர்களில் ஒருவரான வீரமணி என்ற இளைஞர்.

சுமார் முன்னூற்றைம்பது மாணவர்களுக்கு மேல் படித்துக் கொண்டிருந்தும் திருராமேஸ்வரத்திலுள்ள பள்ளிக்கூடம் நடுநிலைப் பள்ளியாகத்தான் இருக்கிறது. அதனால் எட்டாம் வகுப்புக்கு மேல் படிக்க வேண்டுமானால் ஐந்து கி.மீ. தூரத்திலுள்ள

* பல்லாண்டு பல்லாண்டாய்த் திறக்கப்படாத தாய்—சேய் நல விடுதி.



* இதுதான் சந்துணவுக் கூடம்!





* தேவகி. * சாந்தா.



* வீரமணி. * சேகர்.

* கணேசன்.     * வீராசாமி.



கூத்தாநல்லூருக்கோ அல்லது பதினைந்து கி.மீ. தொலைவிலுள்ள மன்னார்குடிக்கோ தான் செல்ல வேண்டும். இதன் காரணமாகவே பல குழந்தைகள் படிக்க முடியாத சூழ்நிலை. இருக்கிற நடுநிலைப் பள்ளிக்காவது ஒழுங்கான கட்டட வசதிகள் இருக்கிறதா என்றால் அதுவும் இல்லை. இந்நிலையில் அப்பள்ளியிலுள்ள சத்துணவுக் கூடம் எப்படியிருக்கும்? கூரையெல்லாம் காற்றில் பறந்து போய் ஒரு குட்டிச் சுவர் போல்தான் காணப்படுகிறது அந்தச் சத்துணவுக் கூடம். நிலைமை இப்படியிருக்கும்போது சத்துணவில் பல்லி, கரப்பான் பூச்சி..... என்று கலந்துவிட்டால் யாரைக் குறை கூற முடியும்?

அந்த ஊரிலுள்ள சேகர் என்ற இளைஞர், ஆசிரியராகப் பணியாற்றும் வீராசாமி, பஞ்சாயத்துத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் கணேசன், இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மன்னார்குடி வட்ட மாதர் சங்கத் தலைவியான தேவகி, பஞ்சாயத்துப் பெண் உறுப்பினர் சாந்தா ஆகியோரைச் சந்தித்த போது, எங்களுக்குக் கிராமம் முழுவதையும் சுற்றிக் காட்டினார்கள். குடிநீருக்காக ஒன்பது அடிகுழாய்கள் போடப்பட்டிருந்தும் அவற்றில் ஆறு எப்போதும் ரிப்பேராகவே இருப்பதால் குடிநீருக்காகத் தாங்கள் பட்டுக்கொண்டிருக்கும் அவஸ்தையைச் சொன்னார்கள்.

இவ்வூரின் வடக்கே வெண்ணாறு, கிழக்கே வீரசோழனாறு, மேற்கே கோரையாறு, தெற்கே அரிச்சந்திரா நதி என்று சுற்றிலும் ஆறு மயமாக இருப்பதால் மழைக் காலத்தில் இந்த ஊர் ஒரு தீவு போலாகித் துண்டிக்கப்பட்டு விடுமாம். மழை நீரின் வடிகால்களில் தூர் வாரப்படாததால் ஒரு நாள் மழை பெய்தால் அந்த நீர் வடிவதற்குப் பத்து நாளாகுமாம். பாசன வாய்க்கால்களிலும் தூர் வாரப்படாததால் நீர்வரத்துக் குறைந்து விவசாயமும் பாதிக்கப்படுகிறதாம். மேலும் கோரையாற்றின் குறுக்கே உள்ள பாலம் மிக மிகக் குறுகலாக இருப்பதால் இந்த ஊருக்கு லாரி போன்ற பெரிய வாகனங்களைக் கொண்டு வர முடிவதில்லை என்பது இவர்களின் மிகப் பெரிய குறை.

நாங்கள் சுற்றிப் பார்த்தவரை அவர்கள் சொன்ன குறைகளெல்லாம் உண்மையானவை; உடனடியாகத் தீர்க்கப்பட வேண்டியவை என்பதில் எள்ளளவும் சந்தேகமேயில்லை. சுதந்திரம் பெற்று முப்பத்தெட்டாண்டுகள் முடிந்துவிட்ட ஒரு நிலையிலும் நமது கிராம மக்களுக்கு இன்னமும் அடிப்படை வசதிகளைக் கூடச் செய்து தர முடியவில்லை என்றால், பேசாமல் அத்தனை கிராம மக்களுக்கும் அரசே இலவசமாகக் காவித் துணியாவது கொடுத்துவிடலாம். அப்படிக் கொடுத்துவிட்டால் தங்களுக்கு அது வேண்டும் இது வேண்டும் என்று யாரும் மூச்சு விட முடியாது பாருங்கள்!

— இளங்கோவன்

புகைப்படங்கள்: மனோ




கடைசியில் தியாகய்யருக்கும் 'மோட்சம்' கிடைத்துவிட்டது. தியாகய்யரும் 'சினிமா' வாக்கப்பட்டு வருகிறார். ஆம்; பிலிம் டிவிஷன் தியாகய்யர் பற்றிய டாகுமெண்டரி ஒன்றைத் தயாரிக்க ஆரம்பித்திருக்கிறது.

தியாகய்யராக நடிப்பவர் பம்பாயைச் சேர்ந்த கலைமாமணி எஸ். ஆர். கஸ்தூரி. நரை தாடி ஒட்டப்பட்டு ஒட்டுக்குடுமி ஒட்டப்பட்டு தியாகய்யர் வர, படப்பிடிப்பைப் பார்க்க வந்த திருவாரூர் ஜனங்கள் 'அசல் தியாகய்யரேதான்யா' என்று தியாகய்யரை நேரில் பார்த்தவர்கள் மாதிரி மெய் மறந்து கொண்டிருந்தார்கள்.

கிருஷ்ண மோகன் என்கிறவர் டைரக்டர். டாகுமெண்ட்ரியின் பின்னணியாக தியாகய்யரின் கீர்த்தனைகள். பாடியிருப்பவர்: டாக்டர் எஸ். ராமநாதன். திருவையாறு, திருவாரூர், ஸ்ரீரங்கம் என்ற பல ஊர்களில் படப்பிடிப்பு நடக்கிறது. ஒரு மணி நேரம் ஓடுமாம்!

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்



**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது. அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்— இப்போது. காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.

23




மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

| | |
|---|---|
| புரதம் | ரிபோ |
| கொழுப்பு | ப்ளேவின் |
| கார்போ | தியோமி |
| ஹைடிரேட் | னைமர் |
| கால்ஷியம் | கால்ஷியம் |
| பாஸ்பரஸ் | பென்டோதெனேட் |
| சோடியம் | கோலின் |
| குளோரைடு | பைரிடாக்ஸின் (பி6) |
| (மீ வடிவில்) | வைட்டமின் (பி12) |
| பொட்டாஷியம் | ஃபாலிக் அமிலம் |
| இரும்புச்சத்து | வைட்டமின் ஸி |
| அயோடின் | வைட்டமின் டி |
| வைட்டமின் 'ஏ' | வைட்டமின் ஈ |
| வைட்டமின் 'பி' | வைட்டமின் கே |

பால் சேர்த்திடத் தேவையில்லை.



**காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூர்ண உணவு**

884. GLC. 120 Tm

குடிநீர்த் திட்டம். [first letter unclear: heavy drop cap]

ஒருங்கிணைந்த ஊரக வேலை வாய்ப்புத் திட்டம்.

ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித் திட்டம்.

ஆம், நமது கிராமங்கள் முன்னேற எவ்வளவோ திட்டங்கள். அரசாங்கம் அவிழ்த்து விடும் புள்ளி விவரங்களைக் கேட்டால், நமது கிராமங்கள் எல்லாமே சாலை வசதி பெற்று, பாதுகாக்கப்பட்ட குடிநீர், மற்றும் அடிப்படை வசதிகள் பெற்று விட்டது போலத்தான் தோன்றும். ஆனால் உண்மை? மக்களுக்குத் தெரிந்தது தான்! மேற்கண்ட திட்டங்களுக்குள் வராத அனாதைக் கிராமங்கள் பல உண்டு. அவற்றில் ஒன்றுதான் ஆதி விடங்கம் கிராமம்.

நூற்றைம்பது ஹரிஜனங்கள்.

இருப்பது ஒரே ஒரு அடிபம்பு.

சுற்றிலும் பயிர்ச் சாகுபடி செய்யும் நிலங்கள்.

காவிரித் தண்ணீர் பல வருடங்களாக 'பெப்பே' காட்டி வருவதால் விவசாயிகள் ஆழ் குழாய்க் கிணறு போட்டிருக்கிறார்கள். சுற்றிலும் அந்த ஆழ்குழாய்க் கிணறுகள் இயங்கும்போது ஆதிவிடங்கம் கிராமத்துக் குடிநீர் அடிபம்பில் காற்றுத்தான் வரும். பாவம், அந்த மக்கள் ஒரு குடம் நல்ல தண்ணீருக்காக ஐந்து கி. மீ. நடக்க வேண்டியதுதான். துணிந்து தண்ணீர் எடுக்கப் போய் விட்டால் வயல் வேலை 'அம்போ' தான். மற்ற சமயங்களிலும் அந்த ஒரே ஒரு அடிபம்பில், தண்ணீருடன் புழுக்கள், பூச்சிகள் பலவருவதுண்டு. இதனால் பலர் பாதிக்கப்படுவதும் உண்டு. சுமார் பதினைந்து வருடங்களுக்கு முன்னால் போட்ட இந்த அடிபம்பு தவிர வேறு எந்தவிதமான குடிநீர் வசதியும் அந்தக் கிராமத்தில் கிடையாது.

திருவாரூரிலிருந்து திருத்துறைப் பூண்டி போகும்வழியில்திருநெல்லிக் காவல் அருகில் வலது கைப்பக்கம் ஒரு டர்ன் அடித்தால் பாம்பு மாதிரி, மண்பாதை வளைந்து வளைந்து செல்லும். அலுத்துப் போகும் அளவுக்குச் சென்றபிறகுவயற்காட்டின்இடையே திட்டாகத் தோன்றுவதுதான் ஆதி விடங்கம் ஹரிஜனக் குடியிருப்பு.

அஞ்சலை.



# நல்ல தண்ணீருக்கே 5கி.மீ. நடக்கணும்...

## —தஞ்சையிலா இந்தக் கொடுமை!

உடம்பு சரியில்லாமல் நடக்க முடியாது போய் விட்டார்களா? உடனே தூக்குக் கட்டிலில் பதினைந்து கி. மீ. வயற்காட்டில் சேற்றிலும், சகதியிலும் நடந்து திருவாரூர் செல்ல வேண்டும். அருகில் வேறு மருத்துவ மனைகள் கிடையாது. ஏன், ஆரம்பச் சுகாதார நிலையம் கூட இல்லை. அப்படியே ஆ. சு. நிலையம் இருந்தாலும் மக்களுக்குப் பயன்படும்படி இருக்காது என்பதுதான் நமது அனுபவம்.

இவர்கள் ஓட்டு போடுவதற்கு ஐந்து கி.மீ. நடந்து சென்று சித்திரையூர் என்ற கிராமத்துக்குப் போக வேண்டும். "சுதந்திரம் பெற்றதற்கு அப்புறம் ஒரு எம். எல். ஏவோ எம். பியோ எங்கள் ஊருக்கு வந்தது கிடையாது'' என்கிறார் அந்த ஹரிஜன கிராமத்திலேயே பி. ஏ. வரை படித்திருக்கும் பாலசுப்பிரமணியம். அப்படியிருந்தும் தொடர்ந்து வோட்டுப் போட்டு ஜனநாயகக் கடமையாற்றிக் கொண்டிருக்கும் இவர்கள் பாராட்டுக்குரியவர்கள்தாம்.

இடையில் மறித்த அ. தி. மு. க. கிளைத் தலைவர் மாரியப்பன், ''இப்பத்தாங்க எங்க எம். எல். ஏ. (மன்னார்குடி தொகுதி அ. தி. மு. க. எம். எல். ஏ. ஞானசவுந்தரம்) எங்க கிராமத்துக்கு வந்தாரு. சாலை வசதியும் குடி தண்ணீர் வசதியும் செய்து தருவதாக வாக்குறுதி அளித்திருக்கிறார்'' என்றார். சென்ற

தேர்தலுக்கு முன்பு வரை மன்னார்குடி தொகுதி, கம்யூனிஸ்ட் எம். எல். ஏக்களையே தேர்ந்தெடுத்து அனுப்பிவந்துள்ளது. அவர்களும் இந்தக் கிராமத்துக்கு ஒன்றும் செய்து விட முடியவில்லை.

ஆதிவிடங்கம் கிராம மக்கள் சொல்லொணாக் கஷ்டத்துக்கு ஆளாவது மழைக்காலத்தில். ஊருக்கு மேற்காகப் பெய்யும் மழைத் தண்ணீர் சரியான வடிகால் இல்லாததால் ஆதிவிடங்கம் ஹரிஜனக்குடியிருப்பைக் கடந்துதான் காவிரியின் கிளைக்குச் செல்லும். அப்போது வீட்டிற்குள்ளும் தண்ணீர், வெளியிலும் தண்ணீர், பாதுகாத்து வைக்கப்பட்டு இருக்கும் நெல்லும் பறிபோகும். அப்புறம், முதலாளியிடம் கையேந்த வேண்டிய நிலைதான். அதற்காக அதிக உழைப்பு, குறைந்த ஊதியம்.. இத்யாதி...

அறுபது லட்சம் குழந்தைகளுக்குச் சத்துணவு வழங்குகிறோம் என்று பறை சாற்றிக் கொள்ளும் தமிழக அரசுக்கு இந்தக் கிராமத்தில் உள்ள 120 குழந்தைகள் மட்டும் கண்ணுக்குத் தெரியவில்லை போலும். கேட்டால், ஐந்து கி. மீ. தூரத்தில் உள்ள சிறுவாமணி, புதூர் போன்ற ஊர்களுக்குச் சென்று பாத்திரத்தில் வாங்கிக் கொண்டு போங்கள் என்று பதில் சொல்கிறார்களாம். ''நாங்க யாரும் அங்கு சென்று உணவு வாங்கி வருவதில்லை ஸார். ஆனா எங்களுக்கு உணவு வழங்குவதாக அங்கு கணக்கு எழுதப்படுகிறது'' என்றார் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் கிராம கமிட்டித் தலைவரான குப்புசாமி.

இவ்வளவு வசதியில்லாத ஊரில் பஸ் மட்டும் எப்படிப் போகும்? மாட்டு வண்டி போவதே கஷ்டம். குண்டும் குழியுமாக உள்ள பாதையில் நடந்து போவதே பெரிய சாதனைதான். அதுவும் மழைக்காலத்தில் கேட்கவே வேண்டாம்.

இவ்வளவு கஷ்டங்களையும் தாண்டி இந்த கிராமத்தில் இருந்து எழுபத்தைந்து குழந்தைகள் படிப்பதற்காக, சிறுவாமணி, புதூர் போன்ற கிராமங்களுக்குப் போகிறார்கள் என்றால் அதைவிடப் பெரிய சாதனை ஏது? தமுக்கடிக்கப்படாத சாதனை இது.

* பாலசுப்பிரமணியன்.  * வெங்கட்ராமன்.  * குப்புசாமி.  * மாரியப்பன்.

* கவிதா: பள்ளிக்கூடம் பக்கத்தில் இல்லாதத்தால் தற்குறியாகவே வளர்கிறள்...

மன்னார்குடி எம். எல். ஏ. மனம் வைத்தால் உடனடியாக இந்தக் கிராமத்தில் ஒரு பால்வாடி திறக்கலாம். வயல்களுக்கு வேலைக்குச் செல்லும் தாய்மார்கள் குழந்தைகளை அங்கே விட்டுச் செல்வது மட்டுமல்லாமல், குழந்தைகளுக்குச் சோற்றுப் பிரச்னையும் இருக்காது! செய்வாரா?

தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகளின் கடைக்கண் பார்வை இந்தக் கிராமத்தின் மீது விழுந்தால், சில கஷ்டங்கள் தீர வாய்ப்புண்டு.

இந்த ஹரிஜனங்கள் வேலை செய்யும் நிலங்களின் உரிமையாளரான வெங்கட்ராமன், ''நீங்க எழுதற வேலை, நல்ல வேலையாக இருக்கட்டும் ஸார். இந்த மக்களுக்காக ஏதேனும் நடந்தால், என்னைவிட சந்தோஷப் படுபவன் வேறு யாரும் இல்லை'' என்றார். இருபத்தாறு வருடங்களாக அந்தக் கிராமத்தில் தனியாகத் தங்கிக் கொண்டு, தனது குழந்தைகளை மட்டும் சென்னையில் படிக்க வைத்துக் கொண்டிருக்கும் வெங்கட்ராமன், அந்தப் பகுதியிலேயே பெரிய விவசாயி. டிராக்டர், ஆடு, மாடுகள் என்று வைத்துக் கொண்டிருக்கிறார். வெங்கட்ராமன் போன்றவர்கள் 'அரசாங்கம் செய்யட்டும்' என்று காத்திராமல் தாங்களாகவே முடிந்தவரை மக்களுக்கு உதவலாம். உதாரணமாக இவர் மனம் வைத்தால் தினமும் திருவாரூருக்குச் செல்லும் டிராக்டரில் உள்ள டிரெய்லரில், ஒரு சின்னத் தண்ணீர் டாங்க் வைத்து அதில் தினமும் தண்ணீர் கொண்டு வந்து ஹரிஜன மக்களுக்கு விநியோகம் செய்யலாம். அதேபோல் ஐந்து கி. மீ. கஷ்டப்பட்டுப் பள்ளிக்குச் செல்லும் குழந்தைகளை வெயில் காலங்களில் தனது டிராக்டரில் கொண்டு விட ஏற்பாடு செய்யலாம். அத்தியாவசியப் பொருள்கள் வாங்க ஆறு கி. மீ. ஓடும் அந்த மக்களுக்கு, பொருட்களை வாங்கி வந்து தரலாம். தினமும் இரண்டு முறை அவரது டிராக்டர் திருவாரூருக்குச் சென்று வருவதால் இந்தத் தொண்டு செய்வதற்கு அதிக கஷ்டப்பட வேண்டியதில்லை. தனியே இதற்கென்று செலவும் ஆகாது அல்லவா?

• நோயாளியா? இப்படித்தான் கொண்டு செல்ல வேண்டும்.



—இல்லப்பா

அட்டை வண்ணப்படம்: மணி

# வேத வைதீக நூல்கள் (விலை தபால் செலவு உட்பட)

நாகராக்ஷரம் — (Devanagari Script)

1. ரிக்வேத ஸம்ஹிதா — 10 மண்டலங்கள் — விலை ரூ. 160/—

2. ஸாமவேத அஷ்டப்ராம்மணம் — 3 பாகங்கள் — விலை ரூ. 210/—

முதல் பாகம் — தாண்டியம், ஷட்விம்சம், திருவிசநல்லூர் மஹா மஹோபாத்யாய ஸ்ரீ ராமஸுப்பா சாஸ்திரிகளால் இயற்றப்பட்ட ஸாமவேத உத்கர்ஷம், ஸாமவேத ஸ்வரமாத்ராதி தத்வவிலாஸம், மன்னார்குடி மஹா மஹோபாத்யாய ராஜீ சாஸ்திரிகளால் இயற்றப்பட்ட ஸாமவேத ஸ்வர விமர்சம்.

இரண்டாம் பாகம் — ஸாமவிதான பிராம்மணம், ஆர்ஷேய பிராம்மணம், ஸாமஸ்வரவிமர்சம், பாணிணீய சிக்ஷா, நாரதசிக்ஷா, லோமச சிக்ஷா, கௌதம சிக்ஷா, ஸாமகான சாஸ்த்ரீய ஸம்ப்ரதாயக்ரமம்.

மூன்றும் பாகம் — தேவதாத்யாயம், ஸம்ஹிதோபநிஷத், சாந்தோக்ய மந்த்ரோபநிஷத், வம்சப்ராம்மணம், உத்ஸர்ஜன கர்மதேவ தர்ப்பணம், காம்யப்ரயோகங்கள்.

3. ஸாமவேத ஸம்ஹிதா (ஸ்வரத்துடன்) 2 பாகங்கள் — விலை ரூ. 110/—

பூர்வபாகம் — ரிக் இல்லாமல் ஆக்னேய ஐந்த்ர கானங்கள் மட்டும்.

இரண்டாம் பாகம் — பாவமான ஆரண சுக்ரீய கானங்கள் மட்டும்.

4. மனுசே ச்லோக & ராமமந்த்ராசே ச்லோக — விலை ரூ 9/—

(மஹாராஷ்ட்ர பாஷையில் ஸமர்த்த ராமதாஸ் இயற்றியது. ஸ்ரீ பீமராவ் கோஸ்வாமி அவர்களின் அருமையான தமிழ் உரையுடன்.

5. ஸ்ரீ ராதாக்ருஷ்ண பூஜா விதானம் — விலை ரூ 10/—

பல புராணங்களிலிருந்து எடுத்து எழுதியது. ராதா கல்யாணம் செய்வோருக்கு அவசியம் தேவையானது.

6. நளோ தந்தம் (நைஷத காவ்யத்தின் சுருக்கம்) — விலை ரூ 9/—

7. வேத பாட வழிமுறை (Syllabus) (ரிக், யஜுர், ஸாம) — விலை ரூ 8/—

வித்யார்த்திகளுக்கு அவரவர்களின் வேதத்தில் எந்த அளவு கற்பிக்கலாம் என்ற விளக்கத்துடன் கூடியது.

நாகராக்ஷரம் — நாகர பதத்திற்கு தமிழ் அர்த்தத்தோடு.

1. ஸ்ரீமத் பாகவதம் — 5 Volumes விலை ரூ. 415/—
2. ஸுந்தர காண்டம் — விலை ரூ. 80/—
3. ஸ்ரீ நாராயணீயம் — விலை ரூ. 55/—

க்ரந்தாக்ஷரம் — (Grantha Script)

1. ஸாமவேத ஸம்ஹிதா (ஸ்வரத்துடன்) — 2 பாகம் — விலை ரூ. 235/—

பூர்வ பாகம் — ரிக், ரிக்பதம், ஸ்தோபபதம், ஆக்னேய, ஐந்த்ர, பாவமான ஆரண, சுக்ரீய கானங்கள்.

இரண்டாம் பாகம் — உத்தர ரிக், ஊஹ ரஹஸ்ய கானங்கள் மற்றும் சாஸ்த்ரீய ஸம்ப்ரதாய கான விளக்கங்களுடன்.

2. சாந்தி குஸுமாகரம் — 2 பாகம் — விலை ரூ. 75/—

3. யாஜுஷ மந்த்ர ப்ரச்னம் — ஏகாக்னி காண்டம் — விலை ரூ. 8/—

க்ரந்தாக்ஷரத்தில் ஸ்வரத்துடன் மணக்கால் பிரம்மஸ்ரீ முத்து ச்ரௌதிகளால் பதிப்பிக்கப்பட்ட கிரந்தங்களின் மறுபதிப்புகள் :

1. ஆபஸ்தம்ப பூர்வாபர ப்ரயோகம் — விலை ரூ. 65/—
2. போதாயன பூர்வாபர ப்ரயோகம் — விலை ரூ. 70/—
3. ஆச்வலாயன பூர்வாபர ப்ரயோகம் — விலை ரூ. 60/—
4. ஆச்வலாயன ச்ரார்த்த ப்ரயோகம் — விலை ரூ. 25/—

V.P.P.யில் அனுப்புவதில்லை. பூராத்துகையையும் M.O. (or) Draft மூலம் அனுப்பவும். செக் மூலம் அனுப்ப வேண்டாம்.

**மேலும் விபரங்களுக்கு: அத்வைத வித்யாசார்ய மஹா ராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி, D – 76, மூன்றுவது கிராஸ், ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம் — 612 001.**

* வீரமுத்து.



# அரசு இயங்கினாலும் பிரச்னைதானா?

* பாதிக்கப்பட்ட இறால் பண்ணை.

அரசு சரியாக இயங்காமல் இருக்கும் போது பாதிக்கப்படுகிறவர்கள் பலர் இருக்கிறார்கள்; அரசு ஓரளவாவது இயங்க ஆரம்பிக்கும் போதும் பாதிக்கப்படுகிறவர்கள் இருக்கிறார்கள். உதாரணத்திற்கு ஒரு சம்பவம்.

கடந்த 78 ஆம் வருஷத்தில் — இறால் மீன் வளர்ப்புத் திட்டம் பற்றி மாயவரத்தில் ஒரு கருத்தரங்கு. அப்போதைய தஞ்சை கலெக்டர் ஏற்பாடு பண்ணியிருக்கிறார். இறால் மீன் வளர்ப்பிலுள்ள சிறப்பு பற்றிப் பேசுகிறார்கள். அந்தக் கூட்டத்திற்கு வந்திருந்த நாகப்பட்டினத்தை ஒட்டியுள்ள வடக்குப் பொய்கை நல்லூரைச் சேர்ந்த எல். வீரமுத்துக்கு "நாமும் இறால் வளர்த்தாலென்ன?" என்று தோன்ற ஆரம்பித்து விட்டது.

பி. ஏ. படித்தவரான அவர் உடனடியாக வேலைகளில் இறங்கி 79ல் இரண்டரை ஏக்கரில் இறால் வளர்ப்புக்காக 'டேங்க்'குகள் கட்டி — இறால் வளர்க்க ஆரம்பித்துவிட்டார். பக்கத்தில்தான் ஓடிக் கொண்டிருந்தது கண்ணும்புக்காரன் கால்வாய். வேதாரண்யத்திலிருந்து உபரியாக வரும் உப்பு நீர் ஓடும் கால்வாய் அது. இறால்களும் அதில் அதிகம்.

இரண்டு பெரிய டேங்குகளிலும், ஒரு நர்சரி டேங்கிலுமாக இறால் வளர்க்க ஆரம்பித்துவிட்டார். 79 ஜூனில் மீன் துறையினர் வந்து 'டேங்கை' பரிசோதித்து இறால் வளர்க்கத் தகுதியான இடம் என்று 'சர்ட்டிபிகேட்'டும் கொடுத்துவிட்டுப் போய்விட்டார்கள். பக்கத்தில் ஓடும் கால்வாயில் வலை போட்டு இறாலைப் பிடித்து, நர்சரி டேங்கில் விட்டுப் பிறகு பெரிய டேங்குகளுக்கு மாற்றி வளர்க்க ஆரம்பித்தார்.

இறாலுக்கான தீனி, தண்ணீர் அடிக்கடி மாற்ற ஆகும் செலவு என்றிருந்தாலும் அக்கறையுடனிருந்தார் வீரமுத்து. ஒவ்வொரு டேங்கிலும் இருபது கிலோ இறால்களை வளர்க்க முடிந்தது. ஒரு வருஷத்திற்கு ஐயாயிரம் ரூபாய்தான் வருமானம் கிடைத்தது. இருந்தாலும் தளரவில்லை. 82 வரை தொடர்ந்து வளர்ப்பு வேலைகளைச் செய்து கொண்டிருந்தார். 83ல் வந்தது பிரச்னை!

காவிரி சீரமைப்புத் திட்டப்படி பொதுப் பணித்துறையினர் வளைவாக ஓடும் கால்வாயை வசதிக்காக நேராக்கி வந்து கொண்டிருந்தார்கள். இவரது வயலுக்குப் பக்கத்திலுள்ள கண்ணும்புக்காரன் வாய்க்காலும் நேராக்கப்பட்டது. அதனால் வீரமுத்துவின் இந்த 'டேங்க்' — இறால் வளர்ப்புத் திட்டம் எல்லாம் அடிபட்டுப் போய்விட்டது. இவரது இரண்டரை ஏக்கர் டேங்கின் குறுக்கே ஒன்றே கால் ஏக்கரில் கால்வாய் வெட்டப்பட்டிருந்தது.

"என் கவனத்துக்குக் கொண்டு வராமலேயே கால்வாய் வெட்டிட்டாங்க. எவ்வளவு ஆயிரம் செலவு பண்ணி இறால் வளர்த்துக் கொண்டிருந்தேன்? எல்லாம் போய் விட்டது. கால்வாய் வெட்டினதினால் பாதிக்கப்பட்ட நில மதிப்புத் தொகையையும், என் தொழில் பாதிக்கப்பட்டதற்கான தொகையையும் உடனே பொ. ப. துறை கொடுக்க வேண்டும்" என்றார் வீரமுத்து. பாதிக்கப்பட்ட 'டேங்க்' இருந்த பகுதிகளையும் காண்பித்தார்.

பாதிக்கப்பட்டுத்தானிருக்கிறது. இருந்தாலும் மறுதரப்பில் சிலரை விசாரித்த போது "சார்... இந்தப் பகுதியில் இறால் வளர்த்த நான்கு பேர் நஷ்டமடைந்து தொழிலையே விட்டுவிட்டார்கள். வீரமுத்துவும் அந்த நிலைமையில்தான் இருந்தார். அப்போதுதான் கால்வாய் வெட்ட வந்தார்கள். வீரமுத்து வாய்மொழியாகக் கால்வாய் வெட்டச் சம்மதம் கொடுத்துவிட்டு இப்போது கூடுதல் பணம் வேண்டுமென்பதற்காக அனாவசியமாகக் குழப்பம் செய்கிறார்" என்றார்கள்.

இவர்கள் கூற்றுப்படி ஒருவேளை, வீரமுத்துவே கால்வாய் வெட்ட சம்மதித்திருந்தால் இப்போது மறுப்பது நாகரிகமில்லை தான். ஆனாலும் ஏறத்தாழ ஒன்றே கால் ஏக்கர் பாதிக்கப்பட்டதற்கான தொகையையாவது அரசு உடனடியாகக் கொடுக்கலாமே! அதற்குக் கூட ஏன் இத்தனை தாமதம்? ஒரு நியாயமான தொகையை அளித்தால் வாங்க மறுத்துவிடவா போகிறார்?

— யூகி

படங்கள்: பானு மணாளன்

# யாருடா அந்த ஹெட்மாஸ்டர்...?

பட்டுக்கோட்டை ராஜா



"இருவத்தஞ்சி ரூபா கொடு பாட்டி... கொடுத்தாத்தான் நான் பள்ளிக்கூடம் போவேன்...இல்லாட்டிஎங்கஹெட்மாஸ்டர் என்னை அடிச்சே கொன்னுடுவாரு!'' சென்ற பத்து நாட்களாய் ஒவ்வொரு நாளும் பள்ளிக்குக் கிளம்பும் வேளையில் தனது அண்ணன் மகன் சங்கர் பாடும் பல்லவி இன்றும் இவன் காதில் விழுந்தது.

மாதத்தின் கடைசித் தேதிகளில் பணத்துக்கு யாரிடமும் பல்லிளித்துக் கடன் கேட்பது இவனுக்குப் பிடிக்காத விஷயம். ஆபீஸுக்குக் கிளம்பிக் கொண்டிருந்த இவன், சங்கரின் குரலைக் காதில் வாங்காதவன் போல் மௌனமாய்த் தன்னை ஆயத்தப் படுத்திக் கொண்டிருந்தான்.

அறை வாசலில் நிழலாடியது — அம்மா.

''ராஜா, சங்கர் ஸ்கூல் சுற்றுலாவுக்காகப் பத்து நாளா இருவத்தஞ்சி ரூபாய் கேட்டு நச்சரிக்கிறானே. உன் காதுல விழுந்துச்சா!'' பேரனுக்காக நிதி திரட்ட வந்திருக்கும் அந்த ஜீவனை இவன் ஆழமாய் ஒரு முறை பார்த்தான்.

''ஏம்மா, என் நிலைமை உனக்குத் தெரியாது? பணத்தை வச்சுக்கிட்டேவா நான் இல்லேன்னு சொல்றேன்... அவன்தான் சின்னப்பிள்ளை புரியாமக் கேட்கிறான்னா, நீயுமா... என்னை நிம்மதியா ஆபீஸ் போக விடுங்க! அவனைச் சுற்றுலாவுக்குப் போக வேணாம்னு சொல்லு... அப்புறமா, அவனைத் தனியே அழைச்சிட்டுப் போய் மகாபலிபுரத்தை நான் காட்றேன்!''

''இல்ல சித்தப்பா! இந்த ஹெட்மாஸ்டரைப் பத்தி உனக்குத் தெரியாது. எல்லோரும் அவசியம் இந்தச் சுற்றுலாவில் கலந்துக்கணும்னு கட்டளை போட்டிருக்காரு. இந்தச் சுற்றுலா சரித்திரப் பாடத்துக்கு ரொம்ப உதவியா இருக்குமாம். பணம் கட்டறதுக்கு இன்னிக்குத்தான் கடைசி நாள். கட்டலேன்னா பிரம்பாலேயே என்னைப் பின்னிடுவாரு சித்தப்பா!'' என்று சொன்ன சங்கர் விசும்ப ஆரம்பித்தான். அவனது நெஞ்சப் பயத்தில் விம்முவதை அந்தச் சிறுமுகமே இவனுக்கு உணர்த்தியது.

''சரி, வாடா! நான் உங்க ஸ்கூல்ல வந்து சொல்றேன்... அப்பேர்ப்பட்ட ஹெட்மாஸ்டர் யாருன்னு பார்க்கிறேன்!'' என்று கிளம்பினான்.

''புதுசா வந்திருக்காரு, சித்தப்பா. பொல்லாத ஆளு!'' என்ற அந்தப் பிஞ்சு முகத்தில் சற்றே தெம்பு கூடியிருப்பதை இவன் கவனித்தான்.

சித்தப்பன் கூட வருகிறான் என்ற பெரு

மையா! பிரம்படியிலிருந்து இன்று தப்பிக்கப் போகிறோம் என்கிற சந்தோஷமா!— எதுவோ ஒன்று அந்தச் சிறு முகத்தில் வெளிப்பட்டது.

சங்கர் இவனது சைக்கிள் கேரியரில் ஏறி உட்கார்ந்து கொண்டான். இவன் பெடலை மிதித்தபோது சைக்கிள் அந்த நடுநிலைப் பள்ளியை நோக்கிப் பயணித்தது.

“சென்னையில் குழந்தைகளைப் பள்ளியில் படிக்க வைப்பதற்கு ஆகும் செலவில் ஒரு சிறிய பங்களாவையே கட்டி முடித்து விடலாம்!” என்று வியாக்கியானம் பேசிய இவனது அண்ணன் சுப்பையன் தன் மகன் சங்கரை இங்கு கொண்டு வந்து விட்டுச் சென்றான். அப்போதிருந்தே அவனைப் படிக்க வைக்கும் பொறுப்பு இவனை வந்து சேர்ந்தது. இவனது கல்லூரிப் படிப்பிற்குச் சுப்பையன் செய்த உதவிகளை மனதிற்



கொண்டு இவனும் அதற்குச் சம்மதித்தான்.

விதவைத் தாயின் முகத்தை இவனும், இவன் முகத்தை அவளும் எத்தனை நாட்களுக்குத்தான் பார்த்துக் கொண்டே இருப்பது. எனவே இன்னொரு புது ஜீவன் இவர்கள் வீட்டுக்கு வருவதை இரண்டு நெஞ்சங்களும் வரவேற்றன. எல்லாவற்றுக்கும் மேலாய் ரத்த பந்தமும் இருக்கிறதில்லையா?

ஆயிற்று ஐந்து வருடங்கள். சங்கர் இப்போது நான்காவது படிக்கிறான். சுப்பையன் தன் மகனைப் பார்க்க எப்போதாவது வருவதோடு சரி. சங்கரின் படிப்புச் செலவுக்கென்று பணம் அனுப்புவதில்லை. அதை இவன் எதிர்பார்த்ததுமில்லை!

“சித்தப்பா, சைக்கிளை வேகமா மிதியேன், நேரமாய்ட்டா அந்த ஹெட்மாஸ்டர் கேட்டை இழுத்து மூடிட்டு கேட்டில் காவல் நிற்பார்... எத்தனை நிமிஷம் லேட்டாப் போறமோ அத்தனை பிரம்படி!'' என்று சங்கர் சொல்லவும் இவன் சிரித்தான். உடனே இவனது பள்ளி நாள் அனுபவங்கள் நினைவுக்கு வந்தன.

இவன் பள்ளியில் படித்தபோது 'கோபாலன் சார்' என்று ஒரு ஆசிரியர் இருந்தார். கண்டிப்புக்குப் பெயர் போனவர். மூக்குக் கண்ணாடியின் வழியே தெரியும் அந்தக் கண்டிப்பான கண்களை நேருக்கு நேர் பார்த்தாலே பொறி கலங்கிப் போகும்!

அவரும் இப்படித்தான். பள்ளிக்குத் தாமதமாய் வந்தால் ஸ்கூல் கிரவுண்டை நூறு முறை சுற்றச் சொல்லுவார். மூச்சிரைக்கச் சுற்ற வேண்டும். இடையில் குடிக்கச் சொட்டுத் தண்ணீர் தர மாட்டார்.

ஒரு முறை அம்மாவுக்கு உடல் நலம் குன்றிப் போனதால் அவளோடு தர்மாஸ்பத்திரிக்குச் சென்றுவிட்டு இவன் பள்ளிக்குச் செல்லப் பத்து நிமிடம் தாமதமாயிற்று.

கோபாலன் சாரிடம் உண்மையைச் சொல்லியும் அவர் இவன் வார்த்தைகளை நம்பவில்லை. ''கிரவுண்டை நூறுமுறை நீ சுற்றித்தான் ஆகவேண்டும்... அப்படிச் சுற்றினால்தான் நாளைக்கு எக்காரணம் கொண்டும் நீ ஸ்கூலுக்கு லேட்டா வர மாட்டே!'' என்று கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டார். மூச்சிரைக்க இவன் கிரவுண்டைச் சுற்றி முடித்த போது மனத்தில் பழி உணர்ச்சி மேலோங்கி நின்றது.

''கோபாலன் சாரைச் சும்மா விடக் கூடாது... உண்மையைச் சொல்லியும் என்னை கிரவுண்டைச் சுத்த வெச்சிட்டாரு... அவரை எந்த வகையிலாவது பழி வாங்கணும்டா!'' என்று வரதனிடம் யோசனை கேட்டான்.

''நம்ம வசந்தி டீச்சருக்கும், கோபால் சாருக்கும் காதல்னு கக்கூஸ் சுவத்துல கரியால எழுதேன்டா!'' — என்று வரதன் சொன்ன யோசனை இவனுக்கு உசிதமாகப் பட்டது.

அன்றிரவே அதனை இவன் செயலாக்கி விட மறுநாள் பள்ளியே இரண்டு பட்டது.

கோபாலன் சார் அதற்காக ஒன்றும் அலட்டிக்கொள்ளவில்லை. வகுப்பில் வந்து அமைதியாய்ச் சொன்னார் — ''கக்கூஸ் சுவத்துல கரிக்கோட்டில் என்னைப் பற்றி அசிங்கமா







## அறிமுகப்படுத்துகிறோம்!

# புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்

## அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரணமளிப்பது மட்டுமல்ல, உண்மையிலேயே அதைத் தடுத்திட உதவுகிறது.

**நீங்கள் வேர்க்குருவைத் தடுக்க முடியும்போது அது தாக்கும்வரை ஏன் காத்திருக்க வேண்டும்?**

இப்போது, உங்கள் வேர்க்குரு பிரச்சினையைக் கட்டுப்படுத்த இன்னும் மிகத் தீவிரமான வழி— புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரண மளிப்பது மட்டுமல்ல உண்மையிலேயே அதை தடுத்திட உதவுகிறது.

**புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஏன் மிகவும் தீவிரமானது?**

உங்களுக்கு அதிகமாக வியர்த்து, அந்த வியர்வை உங்கள் சருமத்தில் அதிக நேரம் தங்கியிருக்கும்போது, வேர்க்குருவின் தாக்குதலுக்கு நீங்கள் ஆளாகிறீர்கள். அதற்காகத்தான் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் மிகவும் தீவிரமானதாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சும் வண்ணம் விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது அது— உங்கள் சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுக்கிறது— ஆகவே வேர்க்குரு இல்லை, எரிச்சல் இல்லை, நமைச்சல் இல்லை. அப்பாடா என்ன நிவாரணம்! அதற்கும்மேல் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், இப்போது மகிழ்ச்சிதரும் புதிய நறுமணமும்* கொண்டுள்ளது

வரும் கோடையில் வேர்க்குரு தாக்கும் வரை காத்திருக்காதீர்கள். விரைந்து வாங்கிடுங்கள் ஒரு பேக் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். வேர்க்குருவை நீங்கள் தடுக்க முடியும்போது, வேர்க்குருவால் ஏன் சிரமப்பட வேண்டும்?

விசேடமாகத் தயாரிக்கப்பட்டுள்ள துகள்கள் செயல்படுகின்றன.



வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சுகிறது.



சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுப்பதற்கான விசேட மருந்துக் கலவை கொண்டது.



சருமத்தை குளிர்ச்சியாகவும் புத்தம் புதுமையோடும் வைத்துக் கொள்கிறது. அதன் இதமான செயல்.




*சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

*Johnson & Johnson*

OBM-4181 TAM

எழுதினது இன்னருன்னு எனக்குத் தெரியும். அவனே உண்மையை ஒத்துக்கிட்டா பிரம்படியோட விட்ருவேன். இல்லேன்னு முட்டை மந்திரிக்க வேண்டி வரும்... அப்படி நான் முட்டை மந்திரிச்சி வெச்சேன்னு அதை எழுதினவனும் அவனுக்கு உடந்தையா இருந்தவனும் மூக்காலயும், வாயாலயும் ரத்தம் கக்கிச் செத்துப் போவானுவோ!'' என்று அவர் சொல்லி முடிக்கும் முன்னே பயத்தில் வரதன் ஆஜராகிவிட்டான். நடந்தது அனைத்தையும் ஒன்றுவிடாமல் சொல்லி முடித்தான்.

அன்று வரதனுக்கும் இவனுக்கும் கோபாலன் சார் கொடுத்த தண்டனை விநோதமானது. இன்றும் நெஞ்சை விட்டு அகலாதது.

ஸ்கூல் கிரவுண்டை மொட்டை வெயிலில் முழங்காலிலேயே பத்துமுறை சுற்றி வர வேண்டும். இரண்டு பேரும் சுற்றினார்கள். அந்த முழங்கால் புண் ஆற ஒரு மாதம் பிடித்தது.

அந்த நிகழ்ச்சியிலிருந்து கோபாலன் சாரின் விசேஷக்கவனிப்பு இவன் மேல் விழுந்தது. 'பன்னிரண்டாம் வாய்ப்பாடு நாளை ஒப்பிக்க வேண்டும்!' என்றால் இவன் ஒப்பித்தாக வேண்டும். இன்றேல் பிரம்பு ஒத்தடம் கிடைக்கும்.

'ஃபிஸிகல் ட்ரெய்னிங்' வகுப்புக்கு யார் மட்டம் போட்டாலும் கோபாலன் சார் விடுவதில்லை. 'உடற்பயிற்சி உடலுக்கு அவசியம்... அது நம்மை நோய்கள் அண்டவிடாமல் காக்கும்!' என்பார். அந்த விளையாட்டு வகுப்புக்கு வராதவர்களின் உடலில் அடுத்த நாள் கோபாலன் சாரின் பிரம்பு விளையாடும்.

அந்தக் கோபாலன் சாரை இப்போதிவன் நன்றியோடு நினைத்துப் பார்த்தான். அவரின் அன்றைய கண்டிப்புத்தான் இன்று இவனது எதிர்காலம் சிறப்பாக அமைந்திட வழி போட்டுக் கொடுத்தது. இந்திலேயே அவர் வளைத்ததால்தான் இன்று இவன் உடம்பு வளைந்து வேலை செய்கிறது. பட்டப்படிப்பு முடித்தபின் எங்கெங்கோ வேலை தேடி இவன் களைத்துச் சோர்ந்த நாட்களில், இவன் வாங்கிய 'ஸ்போர்ட்ஸ்' சான்றிதழ்கள்தான் இவனைத் தூக்கி நிறுத்தின. அந்தச் சான்றிதழ்களைப் பார்த்துத்தான் இவனை ஒரு 'பிரைவேட் கம்பெனி' வேலைக்கு அமர்த்திக் கொண்டது. ஆதலால் கோபாலன் சாரை இப்போதிவன் நன்றியோடு நினைத்துப் பார்த்தான்.

''என்ன சித்தப்பா, நேரா போய்ட்டிருக்கே... இதோ ஸ்கூல் வந்திடுச்சி!'' என்ற சங்கரின் கத்தல் இவனது சிந்தனையைக் கலைத்தது.—

சைக்கிளை விட்டு இறங்கி நடந்தார்கள்.

''அதோ! அதுதான் சித்தப்பா ஹெட்மாஸ்டர் ரூம். நீ மட்டும் போய்ச் சொல்லு... நான் இங்கேயே நிற்கிறேன்!'' என்று சங்கர் தயங்கி நிற்க,

''ச்சி, பயப்படாம வாடா... அதான் நான் வந்திருக்கேனில்ல?'' என்று அவனது கையைப் பிடித்து நடத்திச் சென்றான்.

தலைமை ஆசிரியரின் அறை.

''குட்மார்னிங் சார்!'' என்ற இவனது குரல் கேட்டு நிமிர்ந்த அவரைக் கண்டதும் இவனுக்குள் ஆச்சரியமான ஆச்சரியம். உள்ளம் நடுங்கிக் கால்கள் உள்ளே நுழைந்திடத் தயங்கின. அவர் — கோபாலன் சார் தான்! தலை நரையையும் நெற்றிச் சுருக்கங்களையும் விலக்கிவிட்டு ஒருகணம் அவரை இளவயது கோபாலன் சாராய்க் கற்பனை செய்து பார்த்துப் பயந்தான். எந்தெந்த ஊருக்கோ மாற்றலாகிச் சென்றுவிட்டு மீண்டும் இதே ஊருக்குத் தலைமை ஆசிரியராய் வந்திருக்கிறார். என்னதான் உடல் தளர்ந்திருந்தாலும் கண்களில் இருந்த அந்தக் கண்டிப்பு மட்டும் இன்னும் மாறாமல் இருந்தது.

இவனைத் தனக்கெதிரே உட்கார அனுமதித்த அவர், ''உங்களுக்கு என்ன வேணும்?'' என்றார்.

''என்னை உங்களுக்குத் தெரியலையா ஸார்?''

''ஸாரி, உங்களை எனக்கு நினைவில்லை!''

''ராஜா, சார்.... உங்க பழைய ஸ்டூடண்ட் ராஜாதான் சார் நான்... அந்த வசந்தி டீச்சர் விவகாரத்தில் உங்கள்ட்ட செமத்தியா வாங்கினேனே?'' — என்றிவன் அவரது நினைவாற்றலுக்கு ஒரு கோடிழுத்தான்.

''ஓ, அந்தப் போக்கிரி ராஜாவா... இப்போ என்ன பண்ணிக்கிட்டிருக்கீங்க?''

''பக்கத்து ஊரில் ஒரு ப்ரைவேட் கம்பெனியில் சேல்ஸ் மானேஜரா இருக்கேன் சார். இந்த வேலை எனக்குக் கிடைச்சதுக்கே அடிப்படைக் காரணம் நீங்கதான் சார். உங்களை இங்கே சந்திப்பேன்னு நான் நினைக்கவே இல்லை சார்...'' என்று ஆரம்பித்து தனது சிற்றப்பன் என்னென்னவோ பேசி ஹெட்மாஸ்டரிடம் குழைவதைப் பார்த்து சங்கரின் சிறுமனம் அதிசயித்தது — 'வீட்டில் சித்தப்பா பேசிய வீராவேசம் என்னவாயிற்று?' என்று ஆச்சரியப்பட்டது.

முடிவில் ஹெட்மாஸ்டரிடம், ''இந்த சங்கர் என் அண்ணன் மகன் சார்... நல்லா கண்டிச்சிப் பாடம் சொல்லிக் கொடுங்க...! ரொம்ப நாளைக்கு அப்புறம் உங்களைச் சந்திச்சதில் மகிழ்ச்சி... நான் வரேன் சார்'' என்று சொல்லிவிட்டு இவன் கிளம்பி வெளியே வரவும் சங்கர் பின்னால் ஓடிவந்தான்.

''என்ன சித்தப்பா என்னென்னவோ பேசிட்டுக் கடைசில கற்றுலாவைப் பற்றி ஒண்ணுமே சொல்லாம வந்திட்டியே?''

''நாளைக்கே உனக்கு இருபத்தஞ்சு ரூபாய் பணம் தரேன்... இப்ப நீ கிளாஸுக்குப் போ!'' என்றான் இவன்.

---

**கோவையில் உள்ள ஒரு வாடகைச் சைக்கிள் நிலையத்திற்குச் ''சாலைப் பறவை'' என்று பெயர்.**

— லக்ஷ்மி.

அனுராதா ரமணன் **5**



# நெருப்பாக நீ

இன்பாவையும் நந்தகுமாரையும் அப்படியே விட்டு விட்டு, நாம் மட்டும் இந்தப் பங்களாவிற்குள் கொஞ்சம் முந்திரிக் கொட்டைத் தனமாக நுழைந்து பார்க்க வேண்டிய அவசியத்தில் இருக்கிறோம்.

இந்தப் பங்களா மட்டும் நகர்ப்புறத்தில் இருந்து, ரசனை மிகுந்த வீட்டுக்காரராக இருந்தால், மாதா மாதம், வீட்டை விதவிதமாக அலங்கரித்து, சினிமா ஷூட்டிங்குக்கு வாடகைக்கு விட்டுத் தன் ரசிகத் தன்மையைக் காசாக்குவார்.

இல்லாவிட்டால் குறைந்த பட்சம் ஒரு மூன்று நட்சத்திர ஹோட்டலாவது நடத்துவார்.

குடும்பத்திலுள்ள மூன்று பிரஜைகளுக்காக — இத்தனும் பெரிய பங்களா அனாவசியம்...

மூன்று பிரஜைகளா, நந்தகுமாரையும் சேர்த்தால் நாலு. ஆனால் அவன் எப்பொழுதோ ஒருமுறைதானே வந்து போகிறான்.

மற்ற நாட்களில் — பங்களாவின் மேல் தளத்தில் நந்தகுமாரின் அண்ணன் அவினாஷ்.... ஓர் அறையில். கீழ் தளத்தில், கல்யாணக் கூடத்திலேயே பெரும் பொழுதைத் தள்ளியபடி அப்பா லோகநாதன்.... மாடியில் படுக்கையோடு படுக்கையாகவும், எப்பொழுதோ உடம்புக்கு முடிந்தபோது, கல்யாணக் கூடத்திலும், தனது மூத்தாள் வாழ்ந்த அறைகளிலுமாய் எதையோ தேடும் பாவனையில் அலையும் புவனா — நந்துவின் தாய்.....

இவர்களை விடவும் வேலையாட்களின் கும்பல்தான் அந்த வீட்டில் அதிகம்.

லோகநாதனின் பேச்சு வார்த்தைகள் எல்லாமும் வேலையாட்களுடன்தான்.

பேச்சு வார்த்தையையே மறந்து போன புவனாவிடம் சுவரில் விட்டெறிந்த பந்தாய், எத்தனை நேரம்தான் ஒரு மனிதன் பேசிக் கொண்டிருக்க முடியும்?

அப்படியும் சில சமயங்களில் விடாமல் பேசுவார் லோகநாதன். எங்கே, தானும் பேசாவிட்டால், மனைவிக்கு வார்த்தைகளே மறந்து போய் விடுமோ என்கிற பயம் அவருக்கு உண்டு.

தவிரவும், இவளிடம் அவருக்கு இன்னமும் அன்பு குறையவில்லை. ஒரு காலத்தில், மாவடுவைக் கடித்தாற் போல இவள் பேசும் அழகில் சொக்கிப் போய்த்தானே இவளை இரண்டாம் தாரமாக மணமுடித்தார் அவர்.

அதுவும் மூத்த மனைவி, கோவில் சிலை மாதிரி வீட்டில் இருக்கும்போது.....

இரண்டாம் தாரமாய் இவளை மணக்க, ஏதாவது ஒரு காரணம் வேண்டாமா....

மூத்தவளுக்குக் குழந்தை இல்லை என்பதே ஒரு சாக்காக அமைந்துவிட்டது.

ஆ, அவள் இந்த வீட்டில் வாழ்ந்தது ஒரு சரித்திரம். தெய்வம் மானுடப் பிறவி எடுத்தது போல....

வண்டியோட்டி மாதையன், இன்றளவும் அவளை நன்றியுடன் நினைப்பான்.

'மவராசி..... தாமரைப் பூவுலேருந்து லட்சுமி தேவி இறங்கி வந்தா மாதிரி இருப்பாங்க...

அய்யா பேச்சுக்கு எதிர்த்து ஒரு பேச்சுப் பேச மாட்டாங்க.... ரெண்டு வார்த்தை பேசினலும், மயிலிறகாலே தடவிக் கொடுக் கறாப்பல இருக்கும். பூட்டாங்களே....

அத்தனை நகையோட, எவன் கூடவோ ஓடிப் போயிட்டாங்கன்னு இந்த ஊர் சொல் லுது. நான் நம்பலே.... அந்தம்மா, அய்யாவை விட்டுத்தனியா வாசப்படி இறங்கினதில்லே.. சாமி கும்பிடப் போன எடத்துல எந்தக் கயவாணிப் பயலோ அம்மாவை லாவிட்டுப் போயிட்டான் டோய்!

'ஆனு ஒன்னு நிச்சயம். அவங்க உசி ரோட இல்லே. அது மட்டும் உறுதியாச் சொல்லுவேன். எப்படியின்னு கேட்கறியள.. எம் பொஞ்சாதியோட சில சமயம் அவங் களும் கனவுல வருவாங்க. 'ஏண்டா மாது... சாப்பிட்டியா'ன்னு கேட்பாங்க. 'எம் புருஷ னுக்கு என்னைப் பத்தின நெனைப்பு இருக்கு தாடா'ன்னு கேட்பாங்க. 'குழந்தைங்க நல்லா இருக்காங்களான்னு விசாரிப்பாங்க....

இளையா பெத்த குழந்தைங்கதானேன்னு என்னிக்காவது அலட்சியப்படுத்தியிருப் பாங்களா..... நெஞ்சு மேல் போட்டுக் கிட்டே தூங்குவாங்க. அது மட்டுமில்லே அப்பூ.... ஊருக்குழந்தைங்க எல்லாம் இங்கே தான் குடியிருக்கும்....

'அதுங்களோட பாட்டுப் படிப்பாங்க. சத்தமாப் பாட மாட்டாங்க.... தென்னங் காத்து ஓசையாட்டம் மெல்லிசாப் பாடு வாங்க. உத்துக் கேட்டாத்தான் வார்த்தை புரியும்....

'ராராரோ ரீரிக்கி ராரி தந்தா
ராமருக்கு சீதை தந்தா...
ராமரும் சீதையும் ரதம் ஏறிப் போகை
விலே
சீதை காணிக்கை கொண்டு
கடைத் தெருவும் போகயிலே
சீதை மடிமேலே நீ —
தெறிச்சு வந்த மாங்கனியே....

மாதையனுக்குப் பெரிய எசமானியைப் பற்றிச் சொல்லும்போதே, மீசை துடிக்கும்; மூக்கு நுனி துடிக்கும்; தாடைகள் குலுங்கும்.

'மங்களாம்பா'ன்னு பேரு. பேருக்கேத்த மாதிரியே இருந்தாங்க. அவங்க இந்த வீட்டுல இருந்த மட்டும், வீடு இந்திரபுரியாத்தான் இருந்தது....

இளையவள் புவனவைப் பற்றி மூச்சுத் தெறிக்க மாட்டான். எந்தவித அபிப்ராய மும் இல்லாதவன் போல நடந்து கொண்டா லும், உள்ளூற அவனிடம் ஒருவிதக் கசப்பு இருக்கிறது....

இப்பொழுது அவள் அந்த வீட்டில் பரி தாபத்துக்குரியவளாக இருந்தாலும் பழைய நிகழ்ச்சிகள் எதையும் மாதையன் மறக்க வில்லே.

மாதையன் மட்டும்தான் இந்தக் குடும்பத் தில் வெகு காலமாக உழைப்பவன்..மற்றவர் கள் அனைவரும் சமீபத்தில் வந்தவர்கள்.

ஆதலால், அவனுக்கு அந்த வீட்டில் சில அதிகப்படியான உரிமைகள் உண்டு.

சமையலறை வரையில் போய் வருவான். அவினஷ் இவன் ஒருத்தனுக்குத்தான் அடங்கு வான்.

'அடங்குவான்' என்றால்?

ஊகம்சரி. அவன் அடக்கப்பட வேண்டிய வன். மாடியறையில் கைகளிலும், கால்களி லும் இரும்புச் சங்கிலி மாட்டியிருக்கும். எழுந்து ஓட முடியாதபடி, கால் சங்கிலி யோடு இரும்புக் குண்டு இணைக்கப்பட்டிருக் கும்.

அறையைத் திறந்தாலே வீச்சம், மூக்கைத் துளைக்கும். ஆங்காங்கே காகிதக் கிழிசல்கள் இறைந்து கிடக்கும். ஒரு பெரிய வெள்ளித் தட்டு, உற்றுப் பார்த்தால்தான் வெள்ளி என்பது தெரியும். அதில் பகலில் வைத்த சோற்றுப் பருக்கை விறைத்துக் கிடக்கும். அதன் பக்கத்திலேயே காலையில் தின்று வீசிய இட்லி ஈ மொய்க்கக் கிடக்கும்.

அவினஷ் — இருபத்தியேழு வயது வாலிபன் — உழைப்பில்லாத தீனியும், அதீத முரட்டுத்தனமும் ஒன்று சேர்ந்து — உடம்பில் கண்டு கண்டாய்த் தசை திரள, மாடர்ன் ஆர்ட் வரையும்ஓவியன் சிரமப்பட்டுவரைந்த ஹெர்குலிஸ் சிற்பம் மாதிரி எங்கேயாவது விழுந்து கிடப்பான்.

வாய்மட்டும்எதையோ உளறிக்கொண்டே இருக்கும். புரிந்தும் புரியாததுமான அவியல் வார்த்தைகள்.

''இனித் தட்டு வர்ரியாடா... மாது....



ஏலேய் மாது...''

''ஐயோ, ஐயோ தண்ணிக்குள்ள விழுந்திட்டான்.... அம்மா ஓடி வாயேன்.... ஓடி வா.''

''பாட்டுப் பாடவா.... பார்த்துப் பேசவா. பாடம் சொல்லவா... பறந்து செல்லவா...''

''ஏரோப்ளேன் விடலாமா.... இங்கேயிருந்து விட்டேன்னு உய்ய்ய்ங்....''

''மாது.... பெரிம்மா எங்கே? சொல்லேண்டா. முழிய நோண்டிப்புடுவேன். பெரிம்மா எங்கே.... எங்கே....''

''பயமாருக்குப்பா... பயமாருக்கு... அடிக்காதேப்பா... ஒண்ணுக்கு வர்றதுப்பா... ஐய்யய்யாவ்...''

சத்தம் சில சமயம் தெருவையே தூக்கும்... தெருப் பிள்ளைகள் — இவனிருக்கும் மாடி ஜன்னலுக்கு நேரே நின்று கொண்டு குரல் கொடுப்பார்கள்...

''டேய் பித்துக்குளி! எட்டிப் பாருடா...''

''ஜன்னல் கம்பியப் பிடிச்சிட்டு ஏர்முண்டோய்!''

லோகநாதன், சொல்ல முடியாத ஆத்திரத்துடன் வாசற்பக்கம் வருவார்...

அது என்னமாய்த்தான் அவர் வருவது தெரியுமோ... அடுத்த விநாடியே தெரு சுத்தமாய், சாதுவாய் அவரைப் பார்த்துப் புன்னகை புரியும்.

''மாதையா...''

''எசமான்...''

''அவிஞைவை, பேசாம பட்டணத்துல — கீழ்ப்பாக்கம் ஆஸ்பத்திரியில் சேர்த்துடலாமா...?''

''ஏங்க... கப்பல் மாதிரி வீடும், பெத்தவங்களும், இட்ட வேலையைச் செஞ்சு முடிக்க இத்தனை பேரும் இருக்கறப்ப... அங்கே, போனு... கரண்டு வைப்பாங்களாம்... மூளையில் கத்தி போட்டுப் பார்ப்பாங்களாம்... முதலுக்கே மோசம் வந்துடுச்சுன்னு என்னங்க பண்றது...?''

''இங்கே, பசங்க கேலியும், கூச்சலும் தாங்க முடியலேடா...''





## என்ன வேண்டும்?

உங்களுக்கு இலவசமாக ஓடுகள், மரச்சட்டங்கள், தூண்கள், ஜன்னல்கள், இரும்புத் தூண்கள், தண்டவாளங்கள்,.... என்று ஏதாவது வேண்டுமா? உடனடியாக மன்னார்குடி ரயில்வே ஸ்டேஷனுக்குச் செல்லுங்கள். அங்கிருந்து நீங்கள் எதை எடுத்துக் கொண்டு வந்தாலும் கேட்பதற்கு ஆளே இல்லை. என்ன காரணம்?

"ஒரு காலத்தில் தஞ்சை — மன்னார்குடி — நீடாமங்கலம் ரயில் சர்வீஸ் இருந்தது. இப்போது பஸ் வசதி பெருகிவிட்டதால் ரயில் சர்வீஸையே ரத்து செய்துவிட்டார்கள். ஸ்டேஷனையும், அதிலிருக்கும் பொருள்களோடு அப்படியே விட்டு விட்டுச் சென்றுவிட்டார்கள். அதனால் தேவைப்படுபவர்கள் தேவைப்படுவதை எடுத்துக் கொண்டு செல்கிறார்கள்..." என்று சொன்ன மன்னார்குடி உபயோகிப்பாளர் கூட்டமைப்பின் செயலாளர் பவானி பாபு, "பிரயாணிகள் ரயிலை ரத்து செய்தாலும் சரக்கு ரயிலை விட்டிருக்கலாம். அதில் ஒன்றும் நஷ்டமிருக்காது!" என்றார்.

— நமது நிருபர்.

லோகநாதன் அலுத்துக் கொள்ளும் போது மாத்திரம் — மாதையன், அவினாஷை மிரட்டுவான்...

"இந்தா உன் வாயாலேதான் நீ கெடப் போறே..."

"மாதையா... உனக்கு வாய் எங்கே இருக்கு... காணவே காணோம்... காக்கா கொண்டு போச்சா...?"

"பேசாதே... பேசினா சவுக்கை எடுத்திட்டு அப்பா வருவாரு... உடம்பு முழுக்க வீறிடுவார் வீறி... கையைக் கட்டு... மூலையில் போய் உட்காரு... ஆங்... எழுந்தே, தெரியும் சேதி..."

'என்ன புரியுமோ...?'

லோகநாதன் பெருமூச்செறிவார்.

'எப்படி இருந்த குழந்தை...'

அந்த வீட்டில் முதன் முதலாய் ஒரு மழலையின் அழுகுரலை ஒலிபரப்பிய பெருமை, அவினாஷுக்குத்தான் உண்டு...

மகன் பிறந்துள்ளான் என்கிற செய்தி கேட்டவுடன் அவருக்குத்தான் எத்தனை பெருமை?

அதுவும் பெரியவள் மங்களாம்பாளின் எதிரில் எப்படி நெஞ்சை நிமிர்த்திக்கொண்டு நின்றார்.

"பையன் பொறந்திருக்கான்... இனிப்பு எடுத்துக்கோ..."

"கூடை நகையை மாட்டிட்டா மாத்திரம் ஒரு பொம்பிளைக்கு பெருமை சேராது. தெரிஞ்சுதா... சுமை கழுத்துலேயும் கையிலேயும் இருந்து பிரயோசனமில்லே... வயித்துல இருக்கணும்..."

"பையனுக்கு எங்க அப்பா பேரை வெச்சிருக்கேன்... வம்சம் இனிமே அவனாலே தானே வளரப் போகுது..."

அவரது குத்தல்களை மிகப் பொறுமையுடன் சுமந்தபடி, இந்த அவினாஷின் தொட்டில் விழாவுக்காக, ஓடி ஓடி எத்தனை செய்திருக்கிறாள் மங்களாம்பாள்!

கடைசியில் — இவன் இப்படி மிருகக் காட்சி சாலையிலுள்ள மிருகம் போல் கூண்டில் அடைபட்டிருப்பதை அவள் பார்க்க நேர்ந்தால்...

துடித்துப் போயிருப்பாள். இப்பொழுது புவனா துடிக்கவில்லையா... பெற்ற வயிறு பற்றி எரிய, ஜன்னல் வழியே மகனைப் பார்த்துப் பார்த்து ஊமை அழுகையாய் அழவில்லையா...?

இதெல்லாம்தான் லோகநாதனை நம்பிக்கை இழக்கச் செய்து — தளர்வுறச் செய்யும் விஷயம்...

இத்தனையிலும் அவரது சந்தோஷம் — மகன் நந்தகுமார்.

அதுவும், இன்பாவைப் பற்றி, அவன் ஒவ்வொரு கடிதத்திலும் எழுதும் போதும் — அந்த எழுத்துக்களினூடே நாலிழையாய் மறைந்திருந்த நேசத்தை அவர் புரிந்து கொள்வதற்கு வெகு நாட்களாகவில்லை...

தன் மகன், வளர்ந்து, சாதாரண சராசரி மனிதனுக்குள்ள விருப்பம், காதல், எல்லா உணர்ச்சிகளையும் அனுபவித்து... அடடா... தன் குடும்பத்திலும் இது போன்ற பசுமையான, சுவையான சங்கதிகள் நடக்குமா என்று ஏங்கிக் கொண்டிருந்தவருக்கு — இன்பாவின் வரவு — குதூகலத்தைக் கொடுத்ததில் வியப்பில்லை.

அவர்கள் வரப் போகிறார்கள் என்று தெரிந்தவுடன் அவர், பங்களாவைச் சுத்தம் செய்து, சுண்ணாம்பும் வார்னிஷும் அடித்து, தரையில் விரித்திருந்த கம்பளங்களையும், சோபா நாற்காலிகளையும் மாற்றி...

வீடு கல்யாணம் பட்ட பாடு பட்டுக் கொண்டிருக்கிறது என்றால்... நிஜம்!

இன்பா, வண்டியிலிருந்து இறங்கும் போதே — தன் வீட்டுக்குப் பழைய களை திரும்பி வந்துவிட்டாற் போலிருக்கிறது.

அவள் சற்றுத் தடுமாறி விழப் போனதும், நந்து — பதறியடித்துக் கொண்டு பிடிக்கப் போனதும்...

அவருமே அவசரமாய்க் குரல் கொடுக்கிறார்.

"பார்த்து இறங்கும்மா... மாதையா..."

"எசமான்..."

"கீழே நிறைய கல்லுக் கிடக்கு பாரு... எல்லாத்தையும் முதல் வேலையாப் பொறுக்கிப் போடு..."

அவர், இன்பாவைப் பார்த்து முகம் மலரச் சிரிக்கிறார்.

"வாம்மா!"

(தொடரும்)




# பிலிப்ஸ்

## பிலிப்ஸ் டிசைன் செய்துள்ளதென்றால் அதை ஒவ்வொரு அம்சத்திலும் காணலாம்.



**சீரான அமைப்பு, எழில்மிகு தோற்றம்**
சேர்த்தியும் கம்பீரமும் இணைந்த உறுதிமிக்க பிலிப்ஸ் மிக்ஸர்-கிரைண்டர், கச்சிதமானதும் உபயோகத்திற்கு எளிதானதும் ஆகும்.




**உபயோகத்திற்கு மிக எளிதானது**
இரண்டு ஜார்கள்—திரவ பதார்த்தங்களுக்கென ஒரு உறுதிமிக்க எஸ்ஏஎன் பிளாஸ்டிக் ஜார்; அரைப்பதற்கென ஒரு ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஜார். ஒவ்வொன்றும் தனித்தனியாக இணைக்கப்பட்ட பிளேடுகளுடன்

**பல உபயோகங்கள்**
அரைத்தல், கலத்தல், நறுக்குதல், பிழிதல், ப்ளெண்டிங் மற்றும் விப்பிங் போன்ற வேலைகள் செய்ய 3-4 நிமிடங்களே தேவை. இதில் சக்திவாய்ந்த 450 வாட் மோட்டார் உள்ளது. மூன்று அடிப்படை சுழல் வேகங்களுக்கென ரோட்டரி ஸ்விட்ச் மற்றும் உங்களுக்குத் தேவைப்படும் சரியான சுழல் வேகத்தைப் பெற 'இஞ்சிங்' செளகரியம் கொண்டது.

அம்சத்துக்கு அம்சம் இது உயர்தரமானதாகும். தவிர, நாடெங்கும் பரவலாக விற்பனைக்குப் பின் பிலிப்ஸ் வழங்கும் சர்வீஸ் வசதியின் பின்பலம் கொண்டது.

## பிலிப்ஸ் மிக்ஸர்-கிரைண்டர்

**பிலிப்ஸ்–ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**

CLARION/B/P/1688/203 TAM

'அம்மா, நான் கலந்து வச்ச காப்பியை யார் எடுத்தாங்க?'

சுவாரசியமாய் காப்பியை ருசித்தபடி, ஹாலில் ஈஸி சேரில் உட்கார்ந்து கொண்டு மனைவி பங்கஜத்திடம் பேசிக் கொண்டிருந்த சந்தானம், தன் மருமகள் தீபாவின் அதட்டலான குரல் கேட்டு திடுக்கிட்டு டைனிங் ஹாலை நோக்கிப் பார்வையைத் திருப்பினார். கணவரிடம் பேசிக் கொண்டிருந்த பங்கஜமும் 'என்னமோ, ஏதோ?' என்ற குழப்பம் முகத்திலே பொங்கியெழ திரும்பி தீபாவைப் பார்த்தாள். ஹாலின் ஒரு ஓரமாய் நாற்காலியில் உட்கார்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருந்த சுந்தரின் முகத்தில் 'என்ன நடந்து விட்டதென்று அண்ணி இப்படி அதட்டுகிறாள்!' என்ற குழப்பம். சுரண்டி தாங்கிய கையை இடுப்பில் வைத்தபடி, கோபத்தால் முகம் செக்கச் சிவப்பாய் நிறம் மாற டைனிங் ஹாலுக்கும், ஹாலுக்கும் நடுவிலேயிருந்த வாசற்படியில் நின்றிருந்தாள் தீபா.

'ஆமா... நான் கேட்டுக்கிட்டிருக்கேன். இப்படி எல்லோரும் சமஞ்சு நின்னுட்டிருந்தா எப்படி?'' முகத்துடன், பேச்சிலும் எள்ளும் கொள்ளும் வெடித்தது.

பங்கஜம் சமாளித்துக்கொண்டு,''ஏம்மா... நான்தான் அதையெடுத்து அப்பாவுக்குக் கொடுத்தேன். இப்பஎன்ன ஆச்சு?''என்றாள்.

''என்னைப் பார்க்க எங்க சொந்தக்காரங்க வந்திருக்காங்களே, அவருக்கு கொடுக்கிறதுக்காக காப்பி கலந்து வெச்சேன்.''

''அவ்வளவுதானே..... நீ போய் அவர் கிட்ட பேசிட்டிரு. நான் இன்னொரு கப் காப்பி போட்டுட்டு வரேன்...''

''வேண்டா....வேண்டா, நானே போட்டுக்கறேன். அப்பாவுக்கு வேணும்னு நீங்க ஒரு கப் போட்டுக்கக் கூடாதா?'' என்று முணு முணுத்தபடி உள்ளே போனாள் தீபா.

''அடப் பாவமே..... இப்போ என்ன ஆச்சு? நான்தான் காப்பி போட்டுத் தரேன்னு சொல்றேனே.... ஏன் இப்படிக் கத்தறே?''

சந்தானம் மெதுவாகச் சிரித்தார். 'அவ சொல்றதுலே அர்த்தம் இருக்கு பங்கஜம். யார் யாருக்கு எப்படி எப்படி காப்பி போடணுங்கறதுக்கு விதிமுறை வெச்சிருக்கா. எல்லோருக்கும் ஒரே மாதிரி வாரி வாரிப் போட்டா நிறையச் செலவாகும் பார்.'

''நீங்க என்ன சொல்றீங்க?''

''இந்தா....இதைக் குடிச்சுப் பார். உனக்கே தெரியும்'' என்று தன் காப்பி டம்ளரை அவளிடம் நீட்டினார்.

ஒரு வாய் காப்பியைக் குடித்த பங்கஜம், ''என்னங்க.... உண்மையாவே ரொம்ப நன்னா இருக்கு. நான் உண்மையா தீபாவுக்கு காப்பி நல்லா போடத் தெரியாதுன்னுல்லே நெனச்சிட்டிருந்தேன்.''

''ம்.... நான் நல்ல காப்பி குடிச்சு ரொம்ப நாளாச்சு பங்கஜம். என்ன செய்யறது? யாராவது ஒருத்தர் அட்ஜஸ்ட் பண்ணிட்டு போக வேண்டியதுதானே'' என்றவாறு ஈஸி சேரில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டார் சந்தானம்.



துணுக்கென்றது சுந்தருக்கு.

என்றைக்கோ ஓடி ஓடி உழைத்து இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி பிடிச்சுக் கொடுத்தது, எல்.ஐ.ஸி. கம்பெனி கமிஷன் அனுப்பிக் கொண்டிருந்தது. சராசரி மாதம் முந்நூறு ரூபாய் வந்து கொண்டிருந்தது. சந்தானத்

தின் இன்வெஸ்ட்மென்டிலிருந்து குறைந்தது மாதம் இரு நூறு ரூபாயாவது இன்ட்ரஸ்ட் வந்து கொண்டிருந்தது. வெளியூரில் வேலையாயிருக்கும் சுந்தர் அனுப்பிக் கொண்டிருக்கும் இருநூறு ரூபாய் வேறு. சொந்த வீடு. வாடகை இல்லை. வயதுக் காலத்தில் சந்தானமும், பங்கஜமும் ஹாயாக, வேண்டியதைச் சாப்பிட்டுக் கொண்டு இருக்கலாம். ஆனால்....

நாலு நாள் முன்பு நடந்தது சுந்தரின் கண் முன்னே எழுந்தது.

சுந்தர் ஹாலில் உட்கார்ந்து கொண்டு ரேடியோ கேட்டுக் கொண்டிருந்தான். பங்கஜம் தோழி மங்களத்துடன் வராண்டாவில் பேசிக் கொண்டிருந்தாள். பாவம் மங்களம். அவளுக்கும் அவள் மருமகளுக்கும் நடந்த வாக்குவாதங்களையும் சண்டைகளையும் பாதி கோபத்துடனும், பாதி அழுகையுடனும் விவ

# தினமும் தீபா கண்ணைக் கசக்கரு...



ரித்துக் கொண்டிருந்தாள்.

கவலைப்படாதே மங்களம். இந்தக் காலத்து நாட்டுப் பெண்கள் அப்படித்தான் இருக்கு. மாமனார் மாமியார் பெரியவங்க. அவங்களுக்கு ஆதரவா கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணிட்டுப் போவோம் என்ற மனப்பக்கு வமே இல்லே....''

'டக்' என்ற சத்தம் கேட்டுத் தலைநிமிர்ந்து பார்த்தான் சுந்தர். தீபா காப்பி டம்ளரை பக்கத்திலிருந்த பெஞ்சில் வைத்துவிட்டு விடு விடுவென்று உள்ளே போய்விட்டாள். அவள் முகம் கடுகடுவென்றிருந்தது.

பங்கஜத்தின் குரல் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தது. '....ம்.... நாமதான் அட்ஜஸ்ட் பண்ணிட்டுப் போகணும். ஏதோ சின்னஞ் சிறிசுக.... கொஞ்சம் விட்டுப் பிடி. எல்லாம் சரியாயிடும்.''

''என்னவோ பங்கஜம்.... எனக்கு நம் பிக்கையில்லே. எப்படி விதிச்சிருக்கோ. அப்படியெல்லாம் நடக்கும். ஆமா, சுந்தர் எங்கே இருக்கான்? லக்னோவில்தானே. லக்னோ எப்படி இருக்காம்?''

சுந்தர் கவனத்தை ரேடியோவிலிருந்து வந்து கொண்டிருந்த சங்கீதத்தில் திருப்பி னான். பதினைந்து நிமிடங்கள் சென்றிருக்கும். மங்களத்திற்கு ஆறுதல் சொல்லி அனுப்பி விட்டு ஹாலுக்கு வந்தாள் பங்கஜம். சந் தானம் குளித்து டிரஸ் மாற்றிக் கொண்டு அப்போதுதான் ஹாலுக்கு வந்தார். பங்க ஜம் உள்ளே வருகாத்திருந்தாளோ என்னவோ. முரளி—பங்கஜத்தின் மூத்த பையன், தீபா வின் கணவன்— புயல் வருவது போல் ஹாலுக்கு வந்தான்.

''அம்மா, உனக்குக் கொஞ்சமாவது புத்தி இருக்கா? ஊர்க்காரங்ககிட்டேயெல்லாம் உன் மருமகளைப் பத்திக் குத்தம் சொல லணுமா?'' என்று கத்தினான்.

திடுக்கிட்ட பங்கஜம் சமாளித்துக் கொண்டு, ''என்னடா சொல்றே? நான் என்னடா செஞ்சேன்?''

குழப்பத்துடன் முரளியைப் பார்த்தார் கள் சுந்தரும், சந்தானமும். தீபா டைனிங் ஹாலில் புடைவைத் தலைப்பால் கண்ணைக் கசக்கிக் கொண்டு நின்றிருந்தாள். ஏதும் புரியாமல் அதிர்ச்சியோடு தீபாவின் காலைக் கட்டிக் கொண்டிருந்தது புவனா—முரளியின் மூன்று வயதுக் குழந்தை.

''உன் ஃபிரண்டு மங்களம் மாமிகிட்டே கொஞ்சம் முன்னாலே நீ தீபாவைப் பத்திக் குறை சொல்லலே. 'அவ உங்கிட்டே அட் ஜஸ்ட் பண்ணிட்டு போறதில்லே'ன்னு சொல்லலே. இன்னும் யார் யார்கிட்டே என் னென்ன சொல்றியோ அவளைப் பத்தி. இங்கே பார். இது போல ஒரு நாட்டுப் பெண் கிடைக்க நீ கொடுத்து வெச்சிருக் கணும்.''

நான் அப்படியொன்றும் சொல்லலி யேடா....''

''அப்போ என்ன.... தீபா பொய் சொல் றான்னு சொல்றியா?

''முரளி அண்ணா.... அண்ணி ஏதோ தவறா புரிஞ்சுட்டிருக்காங்கன்னு நினைக்கிறேன். அம்மா அண்ணியைப் பத்தி ஒண்ணுமே சொல்லலியே... நானும் ஹால்லேதானே யிருந்தேன்.''

''ஓகோகோ.... வேலிக்கு ஓணான் சாட்சி. போற போக்கப் பார்த்தா எல்லோரும் தீபா பொய் சொல்றான்னு சொல்வீங்க போலிருக்கு. அவ காதால கேட்டுட்டு வந்து என்கிட்டே சொல்லியிருக்கா.....''

''அண்ணா.... அந்த மங்களம் மாமி அவ மருமகளைப் பத்தி அவ குறைகளை அம்மா கிட்டே சொன்னா. அம்மா அதுக்குச் சமா தானம் சொன்னா....''

''நோ சுந்தர்.... யார் செஞ்சாலும் தப்பு தப்புதான். அது அம்மாவானாலும் சரி.... அப்பாவானாலும் சரி. இது மட்டுமல்ல. தின மும் தீபாவை ஏதாவது சொல்லிட்டேயிருக் காங்க. அவளும் தினமும் கண்ணைக் கசக் கிட்டிருக்கா. எப்படிப் பொறுக்க முடியும் சொல்லு. இதே இடத்துலே இன்னொரு மரு மகளாயிருந்தா மாமியாரையும் மாமனாரை யும் வாயிலே வந்ததெல்லாம் சொல்லி யிருப்பா, இவ ஒரு பேச்சுப் பேசணுமே.... ஊஹூம்.... ஐ ஆம் ரியலி ஃபெட் அப். இப்படி தினமும் நொந்து நொந்து போறதை விட நாங்க தனியா ஒரு வீடு பார்த்துட்டுப் போயிடலாம் போல இருக்கு'' என்று இரைந் தான் முரளி.

''டேய்... என்ன பேச்சுப் பேசறேடா... தனிக் குடித்தனம் போறியா? நம்ம குடும்பத் துலே அதுவும் நடக்கணுமா'' என்றாள் பங்க ஜம் பாதி அழுகையுடன்.

சந்தானம் ஏதும் பேசாமல் முரளியையே வெறித்துப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தார்.

''அண்ணா.... நீ சொல்றது ரொம்ப கரெக்ட். நானும் இங்கே வந்து ஒரு வார மாச்சு. தினமும் பார்த்திட்டிருக்கேன். ஏதா வது குழப்பம், மிஸ்அண்டர்ஸ்டாண்டிங்.... அம்மா மேலே தப்பு இருக்கோ, அண்ணி மேலே தப்பு இருக்கோ அதைப் பத்தி இப்போ வேண்டாம். நீ தனியா போய் இருக் கறதுன்னு டிஸைட் பண்ணினா அது ரொம்ப ஐடியல். அதை முதல்லே செய்.''

முரளி சுந்தரை ஒரு முறை முறைத்து விட்டு கோபமாக தன் ரூமிற்கு சென்று விட்டான்.

''ஏண்டா சுந்தர்! ஏண்டா அப்படிச் சொன்னே? அவன் கோபத்துலே அப்படி ஏதாவது செய்துட்டா....?''

சிரித்தான் சுந்தர். ''முரளியா.... தனிக் குடித்தனமா....? ஏம்மா இரு நூறு ரூபாயிலே வீட்டு வாடகையும் கொடுத்துண்டு அவ னாலே குடும்பம் நடத்த முடியுமா? அட்லீஸ்ட் ஒரு ஆயிரம், ஆயிரத்து இரு நூறு ரூபாய் செலவாகாது! அப்புறம் அவன் தன் அருமை மகளுக்குச்சேர்த்துவைக்கறதுகுறைஞ்சிடாது! இன்னும் கொஞ்ச நேரத்துலே சுன்னு இளிச் சுண்டு வந்து நிற்கப் போறான்'' என்றபடியே மறுபடியும் பேப்பரில் மூழ்கினான்.

சந்தானமும் பங்கஜமும் ஒருவரையொரு வர் பார்த்தபடி உட்கார்ந்திருந்தார்கள்.

# பெரியாரே பெருமூச்சு விட்ட சவுக்கண்டி



ஒரத்த நாட்டின் ஒதுக்குப்புறமாக — கால்நடைப் பண்ணையின் பொறுப்பில் இருக்கிறது சவுக்கண்டி. சவுக்கண்டி என்றால் என்ன என்கிறீர்களா? மண்டபம்தான். 400 வயதாகிப் போன மண்டபம்.

நுணுக்கம் நுணுக்கமாய் என்ன ஒரு மர வேலைப்பாடு! யாளிகள் என்னமாய் நிமிர்ந்திருக்கின்றன! மண்டபம் முழுக்க தேர்ந்த உளி அணு அணுவாய்க் கொஞ்சியிருக்கிறது. இப்படிப்பட்ட மண்டபம் இன்று அனாதை மாதிரிக் கிடக்கிறது. லேசாகப் பாழடைந்த நிலை.

இதைச் சுற்றி ஒரு கதை. 1600 ஆம் ஆண்டு வாக்கில் சரபோஜி மகாராஜாவிடம் வேலை கேட்டு வந்து நின்றிருக்கிறான் ஒற்றைக் கை ஆசாரி. ராஜா, "உன் திறமையைக் காட்டு" என்று சொல்ல, பக்கத்தில் நின்ற மகனை அமர்த்தி உளியாலேயே சவரம் பண்ணிக் காண்பிக்க — ராஜா திருப்தியுற்று இந்த மண்டபம் கட்டச் சொல்லியிருக்கிறார். கட்டும் போதே ராஜாவுக்கும் ஆசாரிக்கும் தகராறு வந்து ஆசாரி போய்விட — மற்றவர்களைக் கூப்பிட்டுக் கட்டச் சொல்ல, யாரும் சரியாகச் செய்யவில்லை. திரும்பவும் ஒற்றைக்கை ஆசாரியைச் சிரமப்பட்டுக் கூப்பிட்டு மண்டபம் முடிக்கப் பட்டிருக்கிறது. அந்த ஆசாரி மண்டபம் ஓரமாக குத்தி வைத்துவிட்டுப்போன உளியைமிகவும்கஷ்டப்பட்டுஎடுத்தார்களாம்! இதெல்லாம் கதை.

பெரியார் தஞ்சாவூர்ப் பக்கம் வரும்போதெல்லாம் இந்த மண்டபத்தில் வந்து உட்கார்ந்து கொண்டு, "இதை சரியாக் கவனிக்கலையே" என்று அதிருப்திப்பட்டிருக்கிறாராம்!

"**ப**ங்கஜம்.... ஹவுஸ் புரோக்கர் வந்திருக்கார் பார்...." என்ற சந்தானத்தின் குரல் கேட்டு பங்கஜம் உள்ளேயிருந்து வராண்டாவுக்கு வந்தாள். முரளியும், தீபாவும் மெதுவாக ஹால் பக்கம் வந்து நின்று கொண்டிருந்தார்கள். சுந்தர் வராண்டாவிலேயே சந்தானத்தின் பக்கம் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

"பங்கஜம்.... நூத்தி ஐம்பது ரூபாய்க்கு ஒரு வீடு இருக்காம். அவுட் ஹவுஸாம். ஒரு ரூம், ஒரு கிச்சன், பாத்ரூம், க்ளோசட். அவ்வளவுதான். பத்து மாத அட்வான்ஸ். இடம் போதும். சின்னக் குடும்பம்தானே. என்ன சொல்றே? பார்க்கலாமா?"

"ம். பார்த்துட்டு வரலாம். நாளைக்கு போகலாம்" என்றாள் பங்கஜம்.

"சரி, அப்ப நான் நாளைக்குக் காலையிலே வரட்டுங்களா?" என்று விடை பெற்றுச் சென்றார் புரோக்கர்.

"என்னங்க இது. நம்மகிட்டே கூட கேட்காம அப்பா பாட்டுக்கு நமக்கு வீடு பார்க்கிறார் போலிருக்கு. அன்னிக்கு எவ்வளவு பெரிய தப்புப் பண்ணிட்டீங்க? உங்களை யார் தனிக் குடித்தனம் போறேன்னு சொல்லச் சொன்னது? இப்பக் கொடுக்கிற இரு நூறு ரூபாயிலே நாம குடும்பம் நடத்த முடியுமா? இப்போ சேமிக்கிற மாதிரி நம்மாலே சேமிக்க முடியுமா? இப்படி மடத்தனமா ஒரு காரியம் செஞ்சுட்டீங்களே? கொஞ்சமாவது முன் யோசனை வேண்டாம்? போங்க.... போய் ஏதாவது சமாளிச்சு இதை நிறுத்தப் பாருங்க" என்றாள் கடுமையாக — ஆனால் மெதுவாக. தீபா முரளியிடம் கிசுகிசுத்தது அரைகுறையாகக்காதில்விழுந்தது வராண்டாவிலிருந்தோருக்கு.

"எனக்கென்னடி தெரியும்? இதென்ன இன்று வெட்ட பூதம் அல்லவா கிளம்பிட்டது?" என்று அவளிடம் கிசுகிசுத்துவிட்டு வராண்டாவிற்கு வந்தான் முரளி.

சுந்தரும், சந்தானமும் பங்கஜமும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

"அப்பா.... என்னப்பா இது? புரோக்கர் வந்துட்டுப் போறார். வீடுன்னு ஏதோ சொன்னீங்க?" என்றான் முரளி அசடு வழிய.

"ஆமாம்பா. அவர்கிட்டே ஒரு வீடு வேணும்னு சொல்லியிருந்தோம். அதுதான் ஒரு வீடு இருக்குன்னு சொல்லிட்டு போனார். ஒரு ரூம், கிச்சன். சின்ன குடும்பம்தானே. போதுமில்லையா? நீ என்ன சொல்றே?" என்றார் சந்தானம்.

"இல்லேப்பா.... ஒரே ஊரிலே நீங்க வேறே, நான் வேறேன்னு இருந்தா சுற்றுப்புறத்து ஜனங்க தப்பாப் பேசமாட்டாங்களா? பையனையும்நாட்டுப்பெண்ணையும்வெளியே அனுப்பிச்சிட்டாங்கன்னு சொல்ல மாட்டாங்களா?"

"ஓ.... ஆமா.... நீ ஸொஸைட்டிக்கு பயந்து சொல்றியா? இல்லே....."

"அது மட்டுமல்ல. இப்போ வர சம்பளத்துலே ஒரு குடும்பத்தையே நடத்தறது கஷ்டமாயிருக்கு. அப்படி இருக்கும்போது சொந்த வீட்டை விட்டுட்டு, வாடகை கொடுத்துண்டு...." என்று இழுத்தான் முரளி.

"ஆமாமா.... பெரிய ஸொஸைட்டி.... முரளி, அந்தக் கவலை வேண்டாம் உனக்கு. உன்னையும், தீபாவையும் வெளியில் போகச் சொன்னால்தானே இத்தனை பெரிய வீட்டை வெச்சுண்டு அவங்களை வெளியே அனுப்பிச்சுட்டாங்கன்னு எல்லோரும் சொல்வாங்க. இந்த வீட்டில் இருக்கப் போறவன் நீதான். வாடகை ஒண்ணும் கொடுக்க வேணாம். உன் குடும்பத்தோடு சௌக்கியமா இரு. தனிக் குடித்தனம் போகப் போறது கிழடுகளான நாங்கதான்" என்று கூறியபடியே உள்ளே நடந்தாள் பங்கஜம்.

முரளியின் முகத்தில் ஈயாடவில்லை.





கரையோரத்தி

மழைக்காலத்தில் ஒருநாள் திடீரென்று தங்கள் கிராமங்கள் எல்லாமே கொள்ளிடம் நதியில் பெருக்கெடுத்து ஓடிவரும் வெள்ளத்தால் அடித்துச் செல்லப் பட்டு விடலாம் என்று தஞ்சை மாவட்டத்திலுள்ள பத்து கிராமத்து மக்கள் பயந்து பயந்து வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். நாங்கள் நேரடியாகச் சென்று பார்த்த போது......

# பய
# வாழும் பத்து கிர

தஞ்சை மாவட்டத்தையும், தென்னாற்காடு மாவட்டத்தையும் பிரிக்கும் கொள்ளிடம் நதி கடலில் கலக்கும் இடத்தில் — தஞ்சை மாவட்டத்தில் உள்ளது அளக்குடி கிராமம். அதைச் சுற்றிக் காவல் மானியம், சேத்திருப்பு, தோணித் துறை, காடு வெட்டி, நெய்க்காரன் பாளையம், பண்டார ஓடை, அய்யம்பேட்டை, நாணல் படுகை, கோரைத் திட்டு ஆகிய கிராமங்கள். இந்தக் கிராமங்களில் வசிக்கும் சுமார் மூவாயிரம் பேரும் ஒவ்வொரு மழைக்காலத்திலும் தூக்கமில்லாமல் வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டுதான் இருக்கிறார்கள். காரணம், எந்த நேரத்தில் நுங்கும் நுரையுமாக சீறிப் பாய்ந்து கொண்டு வரும் கொள்ளிடம் நதி, கரையை உடைத்துக் கொண்டு ஊருக்குள் புகுந்து களேபரம் செய்துவிடுமோ என்ற பயம்தான்!

''இப்படித்தான் 1971ல் ஒரு முறை நேர்ந்தது- அதை மறக்கவே முடியாது... அப்போ முதலமைச்சராயிருந்த கலைஞர் இங்கே வந்து பார்த்தாருங்க. கரையை நல்லா பலப்படுத்தணும்னு அதிகாரிங்ககிட்ட சொல்லிட்டுப் போனாரு. ஆனா ஒண்ணும் நடக்கலே..'' என்றார் அளக்குடியைச் சேர்ந்த பெருமாள் என்பவர்.

மேற்சொன்ன கிராமங்கள் எல்லாமே கொள்ளிடம் நதிக் கரையின் ஓரத்திலேயே இருப்பவை. மழைக் காலத்தில் கரை உடைத்துக்கொண்டால் இந்தக் கிராமங்கள் அத்தனையும் கடலுக்குள் போய் விடும். இதற்குக் காரணம் நேராக வரும் கொள்ளிடம் நதி இந்த இடத்தில் கரையில் மோதி ஒரு 'ட' வளைவு அடித்துப் பின்னர் கிராமங்களைச் சுற்றி வளைத்துக் கொண்டு கடலில் போய்க் கலக்கிறது. இந்த 'ட' வளைவு உடைத்துக் கொண்டால் கொள்ளிடம் இந்தக் கிராமங்களைச் சுற்றிக் கொண்டு செல்லாமல் கிராமங்களுக்குள் புகுந்து கடலுக்குள் சென்று விடும்.

இந்த ஓர் ஆபத்து மட்டுமல்ல, வெள்ளத்துடன் அடித்துக் கொண்டு வரப்படும் மணல் ஒவ்வோர் ஆண்டும் இந்த 'ட' வடிவக் கரையில் மோதிப் பின்னர் எதிர்க்





திருவரசன்.



...ள்ள நடுகைகள்...



# ...து பயந்து ...ராமத்து மக்கள்!

கரையிலேயே தேங்கிக் குவிந்து கொண்டே வருவதால் எதிர்க்கரை மேடாகிக் கொண்டே வருவதோடு அளக்குடிப் பக்கமுள்ள கரை கொஞ்சம் கொஞ்சமாகக் கிராமத்தை நோக்கி நகர்ந்து கொண்டே இருக்கிறது- அதோடு இங்கிருந்து சுமார் எட்டு கி. மீ. தூரத்தில் தஞ்சை—தென்னாற்காடு மாவட்டங்களை இணைக்கும் ரோடு பாலம், ரயில் பாலம் ஆகியவற்றிலும் மண் அரிப்பு ஏற்பட்டுச் சிறிது சிறிதாக அவையும் பலமிழந்து கொண்டே வருகின்றனவாம்!

சாம்பசிவம் என்பவரைச் சந்தித்த போது "எனக்குக் கால் ஏக்கர் பட்டா நிலம் இருந்த துங்க. ஆனா இப்போ அது ஆத்துக்குள்ள இருக்கு..." என்றார்.

ஏன்?

அளக்குடி கிராமத்தின் ஒரு பகுதியே இப்போது ஆற்றுக்குள்தான் இருக்கிறதாம்! அந்த அளவுக்கு ஆறு தன் போக்கைக் கொஞ்சம் கொஞ்சமாக மாற்றிக் கொண்டே வந்து கொண்டிருக்கிறது! இந்த நிலை நீடித்துக் கொண்டே போகுமானால் கடலை ஒட்டி உள்ள கிராமங்களே இருக்காது என்று மக்கள் மனுக்கள் மீது மனுக்களாக அரசுக்குக் கொடுத்துக் கொண்டிருக்கவே 1981 ல் ஒன்றரைக் கோடி செலவில் அளக்குடி கிராமத்தில், கொள்ளிடம் கரையில் மோதித் திசை திரும்பும் கரையைப் பலப்படுத்த டெண்டர் கோரப்பட்டு வேலைகள் ஆரம்பித்தன. ஆந்திராவைச் சேர்ந்த ஒருவரும் தமிழ்நாட்டைச் சேர்ந்த ஒருவரும், பகுதி பகுதியாகக் காண்டிராக்ட் எடுத்து வேலையை ஆரம்பித்தார்கள். பின்னர் என்ன நடந்தது? திருவரசன் என்பவர் சொன்னார்...

"ஆந்திரா நபர் காண்டிராக்ட் எடுத்த அளவுக்குப் பக்காவா கரையைப் பலப்படுத்தி விட்டுப் போய் விட்டார். நம்ப தமிழ் நாட்டு காண்டிராக்டர்தான் கொஞ்சம் வேலை செய்ததோடு கட்டுபடியாகவில்லையென்று சொல்லி, வேலை செய்தவரைக்கும் பணத்தை வாங்கிக் கொண்டு போய்விட்டார். இப்போது பாருங்கள்..." என்று ஓர் இடத்தைக் காண்பித்தார்.

சுமார் நூறு அடி தூரத்துக்குக் கரையில்





* பெருமாள்.

பனை ஓலைத் தடுப்புப் போட்டு, அதற்குள் பேருக்குச் சில மணல் மூட்டைகளைப் போட்டிருந்தார்கள். ''மழைக்காலத்தில் இந்தத் தடுப்புத் தாங்குமா சார்?'' என்று கேட்டார் திருவரசன்.

கரையின் ஓரத்திலேயே குடியிருக்கும் விவேகானந்தன் என்பவரை விசாரித்த போது, ''எல்லாம் மேலிடத்துச் சிபாரிசு தாங்க. அந்த காண்ட்ராக்டரு தி. மு. க. காரராக இருந்தாலும் ஆளும் கட்சியில் உள்ள அந்த 'அம்மா' ஆதரவாளருங்க. அதாங்க பாதில விட்டுட்டுப் போனாக் கூட யாருமே கண்டுக்கலே'' என்றார்.

விவேகானந்தன் சொல்வது போல் இந்த காண்ட்ராக்ட் விஷயத்தில் அரசியல்வாதிகளின் தலையீடு இருக்கிறது என்பதை நாம் நம்பாவிட்டால் கூட, கரையைப் பலப்படுத்தும் வேலை பாதியில் நிற்பதை நாமே நேரில் பார்த்ததால், 'ஏதோ' கோல்மால் நடந்திருக்கிறது என்பது மட்டும் தெளிவாகப் புரிந்தது!

சரியாகக் கொள்ளிடம் கரையின் கீழேயே வசிக்கும் ஏழு குடும்பத்திற்கு மட்டும் அரசாங்கம் அங்கிருந்து சுமார் இரண்டு கி. மீ. தூரத்தில் உள்ள பண்டார ஓடை என்ற இடத்தில் வசிக்க இடம் ஒதுக்கிக் கொடுத்தாம். ஆனால் யாரும் போகவில்லை.

''ஏன்?'' என்று கேட்டதற்கு, விவேகானந்தன், ''நாங்க இப்போ இருக்கிறது பட்டா நிலங்க. ஏற்கெனவே பாதி நிலத்தை ஆத்துலே விட்டுட்டோம். இதையும் கணக்கெடுத்துக் கொண்டு, எங்களுக்குப் பட்டா நிலத்தோடு நஷ்டஈடும் சேர்த்து வேணும்னு கேட்டோம். அரசு கொடுக்கலே. அதாங்க இங்கேயே இருக்கோம்'' என்றார்.

அரசு உடனடியாகச் செய்ய வேண்டியது — அளக்குடி கிராமத்தில் உள்ள கொள்ளிடம் கரையில் விட்டுப் போன வேலைகளை உடனடியாகப் பூர்த்தி செய்து கரையைப் பலப்படுத்துவதுதான். இதன் மூலம் பத்து கிராமங்களில் வாழும் மக்களுக்கு அழிக்கப்பட்டு விடுவோமோ என்ற பயத்திலிருந்து விடுதலை தரவேண்டும். பிறகு ரோடு — ரயில் பாலங்களில் ஏற்பட்டுள்ள மண் அரிப்பையும் கவனிக்க வேண்டும். இதைக் கண்டு கொள்ளாமல் விட்டுவிட்டால், ரயில் — ரோடு பாலங்கள் இரண்டும் இனி வரும் ஒரு வெள்ளத்தின்போது கிளியாற்றுப் பாலம் போல அடித்துக் கொண்டு போகப்பட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

கிராமங்களையும் பாலங்களையும் அழிவிலிருந்து அரசு காப்பாற்றுமா?

— ப்ரியன்.

படங்கள்: மனோ.

---

# அருள் வாக்கு



ஸ்வய மரியாதை என்பது கொஞ்சம் கவனக் குறைவாக இருந்துவிட்டால் தற்பெருமையாகி விடும். அப்படிப்பட்ட ஸமயங்களில் மற்றவர்களைத் தூக்கி எறிந்து ஆணவமாகவேகூடப் பேசி விடுவதுண்டு. அதாவது, மற்றவரின் ஸ்வய மரியாதையைப் பங்கப் படுத்துவதுண்டு. நல்ல கவிஞர்களாக, அறிந்தவர்களாக உள்ளவர்களும் இப்படி ஒவ்வொரு ஸந்தர்ப்பத்தில் பண்ணியிருக்கிறார்கள். காளிதாசன், கம்பன் ஆகியவர்களைப் பற்றியே இம்மாதிரியான கதைகள் இருக்கின்றன.

இந்த விஷயங்களை ஆழமாக எடுத்துக் கொண்டு அவர்களை எடைபோட்டுவிடக் கூடாது. அவர்களுடைய உயர்ந்த குணங்களும் பண்புகளும் பெரிய 'ரிஸர்வாயர்' மாதிரித் தேங்கியிருந்தென்றால், அதில் மேல் பரப்பிலே எப்போதோ எழுந்திருந்து அப்புறம் அமுங்கிப் போய்விடுகிற அலைகள் மாதிரிதான் இவற்றை நினைக்க வேண்டும். இப்படி அலை கொஞ்சம் வீசுவதே ரிஸர்வாயருக்கு அழகு. நம்மிடம் தற்பெருமை அலையடித்தால் அது சொம்பு மாதிரி, டம்ளர் மாதிரி இருக்கிற ஜலத்தில் அலை அடிப்பது போன்ற விபரீதமாக ஆகும்!

ஸாதாரணமாகப் போட்டி, பொறாமை இருப்பது தப்புதான், ரொம்பத் தப்புதான். ஆனாலும் வித்யை வளர வேண்டுமானால் அதற்கு இதுவும் உதவி பண்ணுகிறது. ஒரு மாணவன் மற்றவர்கள் 'rank' எடுக்கட்டுமென்றுபோட்டிபோடாமல்இருந்தால் ஸரியா?

பொறாமையில்லாமல் போட்டி இருப்பது தான் உத்தமம். அதுதான் ஸரி. ஆனால் பெரிய பண்டிதர்கள், கவிகள் விஷயத்தில் இந்தப் பொறாமைகூட மிதமிஞ்சிப் போகாத போது அவர்களுடைய குணசித்திரத்துக்கு ஒரு 'கான்ட்ராஸ்ட்' (வேறுபாட்டு ருசி) தருவதாக அழகு செய்கிறது.

**—ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

# புராணம் படிப்பதின் பயன்

புராணம் கேட்டால் எல்லாத் தேவர்களுக்கும் திருப்தியுண்டாவது போல் சந்த புஷ்பாதி உபகரணங்களால் செய்த பூஜையாலும் கோதானம், சொர்ணதானம், வெள்ளி தானம், வஸ்திர தானம் முதலிய தானத்தாலும் திருப்தியுண்டாகாது. தர்மங்களைச் சொல்லும் புராணம் கேட்பதாலேயே தேவர்கள் ப்ரீதியை அடைவார்கள். புராண இதிகாச சிரவணம் செய்த புண்ணியன், நல்லோர் உறவால் அற உணர்வு உண்டாகி தர்மங்களெல்லாம் உணர புராணம் கேட்க வேண்டும். அறம் பொருள் இன்பம் வீடு என்பவை பூவுலகில் நன்றாக விளங்குவதற்காகவே புராண இதிகாசங்கள் யாவற்றையும் கேட்க வேண்டும். புராண இதிகாசங்களைக் கேட்பவனும் பக்தியோடு பாராயணம் செய்பவனும் உன்னதமான பதவியை அடைவார்கள்.

(சிவ மஹாபுராணம்)

# மாண்புமிகு முதலமைச்சர்

சருக்கம் — 5

''உங்கள் நிழல் என் மீது...

அடியார்கள் பட்ட சோதனைகளைப் பற்றி முழுக்கவும் அறிந்திருந்த இராம தேவர், இப்போது தமக்கு முதன்முறையாகக் கண்ட சோதனையை எண்ணிப் பார்க்கிறார்.

சோதனை என்பது அரண்மனையில்தான் வரவேண்டும் என்பதில்லையே! அது வர வேண்டும் என்றிருந்தால் அமைதியாக, ஏகாக்கிருதனாக இருப்பினும் வந்தே தீரும் என்று ஆறுதல் கொள்கிறார்.

பக்தி மார்க்கம் என்றாலே சோதனைகளைக் கடப்பதுதானே.....? பின்னர்தானே ஞான மார்க்கம்?

''என் இராமதேவரே? எங்கள் வீட்டில் உண்ணக்கூடாதா? வேளன் மரபு செங்குந்தர் வீட்டு விருந்துண்ணத் தயங்குமானால் வேண்டாம்.''

ஐயகோ! எவ்வளவு பெரிய வார்த்தைகளைப் போட்டு வெடிக்கிறார் இவர்?

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை கவிராட்சஸரே! காலையில்தான் ஒரு சிவனடியாரைத் திருநாகேச்சுரத்தில் கண்டேன். அவரது பிறந்த நாளாம் இன்று! எல்லாச் சிவனடியார்களுக்கும் நான் விருந்து சமைத்தது போக, எனக்கு விருந்து படைத்து ஆத்ம நிறைவு கொள்ள ஆசைப்பட்டார் அந்த அடியவர். நானும் வாக்குக் கொடுத்துவிட்டேன். வாக்கு தவறுவதா என்றுதான் தயங்குகிறேன்.''

முதன்முறையாக இவரை அழைத்து அது தோல்வி கண்டதில் ஒட்டக்கூத்தருக்கு இயல்பாகவே ஒட்டிக்கொண்டிருந்த சினம், தட்டிப் பறந்து சினக்கச் செய்தது. அவர் எழுந்து கொண்டார்.

''என்னை மன்னிக்க வேண்டும் ஒட்டக்கூத்தரே!''

''அதனாலென்ன? பரவாயில்லை. இரவு அடியார் ஆன்மாவையே நிறைவு செய்யுங்கள். நான் விடை பெறுகிறேன்.''

''நாளை அரங்கேற்றம் முடிந்ததும் நம் வீட்டில் உண்ணுகிறேன்.''

''அரங்கேற்றம் முடிந்ததும் அரசு விருந்து. பிறகு பார்த்துக் கொள்ளலாம்.''

கைத்தடியின் சற்று அதிகப்படியான வீச்சோடு புறப்பட்டார் ஒட்டக்கூத்தர். அந்த வீச்சே அவரது கோபத்து மூச்சுக்கு முன்னுரை கூறியது. எரிந்து கொண்டிருந்த



விளக்குகளெல்லாம் அவரை எரிச்சலுறச் செய்து கொண்டிருந்தன. கொட்டமடக்கியே பழக்கப்பட்ட ஒட்டக்கூத்தருக்கு, யாரோ தமது கொட்டத்தையடக்குவது போன்ற உள்ளுணர்வு. எல்லாம் அரச விசுவாசத்தால் வந்த அவமானம்என்றேஎண்ணும்படியாகச் செய்தது.

வெளிவாசலுக்குவந்துநின்றுபல்லக்கைக் கவனிக்கிறார் ஒட்டக்கூத்தர். அங்கே இன்னொரு பல்லக்கு இருக்கக் கண்டு பார்க்கிறார்.

ஓ..... இதுதான் இராமதேவர் சொன்ன சிவனடியார் அனுப்பிய பல்லக்கோ?

பல்லக்கையணித்தே நின்றிருக்கும் பாவை யார்? மலரத் துடிக்கும் மொட்டு போல.... விரலின் தொடுவுணர்வுக்குத் துடிக்கும் விஞ்சையர் மகள் போல....

கூத்தரின் கூர்த்த கண்கள் கூர் நீட்டிய அம்பு போலத் தைக்க, அதன் கூர்மை தாளாமல் நாணித் தலைகுனிந்து போனாள் அந்தப் பாவை வல்லரசி.

அவர் ஒட்டக்கூத்தர் என்பது வந்ததுமே கேள்விப்பட்டதில் அறிந்து கொண்டிருந்தாள் அவள்.

கைத்தடியை வீசிக் கொண்டே பல்லக்கில் சென்று அமர்ந்தார். பல்லக்கும் புறப்பட்டது.

வல்லரசி மாளிகையினுள் நுழைந்து இராமதேவரைப் பணிந்து தன்னை அறிமுகம் செய்து கொண்டாள்.

அலகில் ஜோதி அம்பலத்தாடுவான் என்னை இவ்வாறான அவலத்துக்கு ஆளாக்கிவிட்டானே என்கிற மனக் கவலையுடன் வெளியே வந்த இராம தேவர், பல்லக்கில் அமர்ந்தார். வல்லத்தரசியும் தமிழுக்குப் பணிவிடை செய்பவள் போல எதிரே ஓர் ஓரமாக அமர்ந்து கொள்ள, பல்லக்குப் புறப்பட்டது. துணைக்குச் சோழ வீரர்கள் பதின்மர், புரவிகள் சகிதமாகப் பின் தொடர்ந்தனர்.

கங்கை கொண்ட சோழபுரத்துச் சோழ கங்கைஏரியையொட்டியிருந்தது அந்தமாளிகை.

தலைநகரில் தங்குவதாக முடிவு செய்த போதே, மதுரையிலிருந்து தெரிந்த ஒரு செல்வந்தருக்கு ஓலை போக்கி இருந்தாள் ஜோதி.

பெரும் சிவபக்தரான அந்தச் செல்வந்தர்



ஜோதியின் நாட்டியத்தில் கைலாயத்தைக் கண்டவர். எனவே அவளது தங்கு வசதிக்கென தனி மாளிகை ஏற்பாடு செய்திருந்தார்.

சோமனை முடியில் தரித்த சொக்கநாதப் பெருமானின் மறு அவதாரமே இராம தேவர் என்று எண்ணிய ஜோதி, வாசலில் நின்று, வரவேற்றாள். சொர்ணப் பதுமை உயிர் பெற்று அலங்கரித்துக் கொண்டது போன்ற ஜோதிமயமான அழகு அது!

''நேரம் கடத்திவிட்டேனு ஜோதி?'' என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார் இராம தேவர். அவரது அலங்காரமும் காலையிலிருந்ததற்கும் இப்போதைக்கும் வேறுபாடாயிருந்தது.

காலையில் சிவபெருமானைப் போல இருந்தார். இப்போது சுந்தரர் பெருமானைப் போல வருகை தந்திருக்கிறார்.

ஜோதியின் அலங்காரம் வேறுபட்டே இருந்தது. காலை அடியவளாக இருந்தாள். இப்போது அப்சரஸாக இருந்தாள்.

தாம் தங்கி இருக்கும் விருந்தினர் மாளிகையைவிட எந்தவிதத்திலும் அந்த மாளிகை குறைவிலாது இருப்பதைக் கண்டார் இராம தேவர். சொல்லப் போனால் கொஞ்சம் கலையழகு கூடுதலாகவேயிருந்தது.

''சுவாமீ! நீங்கள் இங்கு வருகிற செய்தி சோழமாமன்னருக்குத் தெரியுமா?''

''தெரியாது'' என்று கூறிய இராமதேவர், ஒட்டக்கூத்தர் செய்தியை மட்டும் விளக்கினார்.

''ஐயய்யோ! ஒட்டக்கூத்தர் பொல்லாத மனிதராயிற்றே! நீங்கள் செய்தியை வல்லரசியிடம் சொல்லியனுப்பிவிட்டு, கூத்தர் கூப்பிட்டதற்கு மறுப்பின்றிச் சென்றிருக்கலாமே!''.

ஜோதியைக் கூர்ந்து கவனித்த இராம தேவர், ''நான் யாருக்காகப் பயப்பட வேண்டும்? எதற்காக அஞ்ச வேண்டும்? என்னைப் படைத்த ஈசன், எனக்காகவே படைத்தான்; தன்னையும் அளித்தான்; தமிழையும் அளித்தான். ஜோதி, நீ பெயரில் ஜோதி! நான் லட்சியத்தில் ஜோதி!''

''நான் பெயரில் மட்டும்தான் ஜோதியா?''

''அழகிலும் ஜோதிதான்! எனக்கு அது அவசியமற்றது. கலையில் ஜோதியாக இருக்கலாம். இன்னும் என் கண்கள் சாட்சி சொல்லவில்லையே!''

''விரைவில் சொல்லும்'' என்று உறுதி அளித்தாள் ஜோதி. பிறகு, ''சுவாமீ! நீங்கள் பெண்களை அதிகமாக வெறுக்கிறீர்கள்!'' என்றாள்.

''சிவ, சிவ! என்னை ஈன்றவளும் ஒரு பெண்.''

''பின் எனது அழகை அவசியமற்றது என்று கூறுவானேன்?''

''நிலையில்லாதது.''

''நிலையானது?''

''சிவம்.''

சிவம் என்ற சொல்லைக் கேட்டதும் சிலிர்த்தெழுந்த ஜோதி, தனது ஒற்றைக் காலை நடம் புரிவது போல எடுத்து குதிக்காலை அழுத்தமாகத் தரையில் உதைத்தாள்.

ஜல்.....

பாதச் சிலம்பு பதத்துக்கு ஆயத்தம் போல, பரதத்துக்கு ஆயத்தம் போல பரல் குரல் எழுப்பி இராம தேவரைப் பதற்றமுறச் செய்கிறது.

இரவில் இமைகள் கண்களைத் தழுவியதும் கேட்குமே.... அந்தச் சலங்கைக் குரல் இப்போது நனவில் கேட்கிறது....

எடுத்த பாதத்து இனிய குரல்...... எம்பிரானின் நடனக் குரல்.....

''சுவாமீ! நீங்கள் ஆட உத்தரவிட்டால் இப்போதே ஆடுகிறேன்.''

''வேண்டாம்! சிவன் முன் தவிர எவன் முன்னும் ஆட மறுப்பவள் நீ!''

''அது பாண்டியன் பார்வையிலிருந்து தப்பிக்க நான் வகுத்துக் கொண்ட பாதை! இங்கே இருப்பவர் சிவத்தின் மறு உரு; தமிழின் பொன்மனம்! தமிழர்தம் இதயத் தலைவனுகப் போகிறவர். அவர் கட்டளையிட்டால் எங்கும் ஆடுவேன்!''

மருட்சி கண்டு மலைத்து நோக்குகிறார் மங்காத் தமிழின் மாதவச் செல்வர் இராம தேவர்.

''தமிழர் தம் இதயத் தலைவனு? நீ....''

''கனவு கண்டேன்; களிப்புற்றேன். நனவாக வேண்டி இன்று காலை நாகேச்சுரரைப் பிரார்த்தித்தேன்!''

''ஜோதி என் கதை....''

''எனது கதை!''

''நீ என்ன சொல்கிறாய் ஜோதி?''

''நடக்கப் போவதைச் சொல்லுகிறேன். எனக்கு ஈசன் அளித்த ஞானமே தீர்க்க தரிசனம். அதனால்தான் சொல்லுகிறேன்;

---

# பஸ் இல்லை: படிப்பும் இல்லை!



கும்பகோணம் தாலுகாவிலுள்ளது இலந்துறை என்ற கிராமம். இங்கு ஆரம்பப் பள்ளிக்கூடம் மட்டும்தான் உள்ளது. உயர்நிலைப் பள்ளிக்குச் செல்ல வேண்டுமானல் ஐந்து கி. மீ. தூரம் நடந்துதான் செல்ல வேண்டும். பஸ் வசதி இல்லை. எப்படியாவது பஸ் வசதி ஏற்படுத்திவிட வேண்டுமென்று கடந்த 82 ல் வேலைக்கு உணவு என்ற திட்டத்தில் காடு மேடுகளையெல்லாம் சமன்படுத்தி மண் ரோடு ஒன்றும் போட்டு விட்டார்கள். ஆனாலும் பஸ் மட்டும் வர மாட்டேன் என்று குரங்குப் பிடிவாதம் பிடிக்கிறது. அதனால் இவ்வூரில் பல குழந்தைகள் உயர்நிலைப் பள்ளிக்குச் சென்று படிக்க முடியவில்லை.

— நமது நிருபர்.

நீங்கள் கட்டளையிட்டால் எங்கும் ஆடு வேன்!''

''எங்கு வேண்டுமானாலும் ஆடு; தயவு செய்து எனது இதயத்தில் மட்டும் ஆடி விடாதே! அது அந்த நடராஜப் பெருமான் ஆடும் அரங்கம்! அந்த இதயத்தைப் பரி சுத்தமாக்க என்னுடன் பழகு; அசுத்தமாக் கப் பழகாதே! ஜோதி! நான் உன்னை அந்த நடராஜன் திருவுருவில் பார்க்கிறேன்! ஒரு வன் முன்னேற்றத்தைக் காக்க ஒரு பெண் தேவை; மறுக்கவில்லை. என்னைக் காக்க யார் என்று அந்த ஈசனைக் கேட்டேன்! அப்படி யான ஒரு பரிசுத்தமான பெண் யார் என்று கேட்டேன்! நீ குறிப்பிட்ட அதே நாகேச்சுரர் தான் 'ஜோதி' என்று சொன்னார். நீ என் வாழ்வின் முன்னேற்றத்துக்கு ஜோதியாக இரு! நீதியாக இரு! ஆனால், பீதியாக இராதே! மீதியாக இராதே! என்னை மீறவும் விடாதே! என்னைக் காப்பதன் மூலம் என் தமிழையும் காக்கிறாய்! ஜோதி.... ஜோதி....''

இராமதேவர் அப்படியே இருக்கையில் சாய்கிறார். கண்களை இறுக மூடிக் கொள் கிறார். அங்கே இரண்டு நீர் முத்துக்கள். நீர் முத்துக்களிலும் வலம்புரி முத்துக்கள் உண்டு என்பது போல....

ஓ. இவர் பொய்ப் பொருளல்ல; மெய்ப் பொருள்; மெய்ப் பொருள் நாயனாரைப் போன்ற மெய்யான பொருள்....

எங்கோ 'தத்தா நமர்' என்பது போன்ற குரல் காற்றில் மெல்லக் கேட்கிறது. அது 'ஜோதி நமர்' (ஜோதி இவர் நம்முடைய வர்) என்பது போல ஒலிக்கிறது. யார் குரல்? திருநாகேச்சுரர் குரலா?

* நிறைத்த செங்குருதி சோர வீழ்கின்றார். நீண்ட கையால், தறைப்படும் அளவில் 'தத்தா நமர்' எனத் தடுத்து வீழ்ந்தார்.'

இவர் நம்முடையவர் என்று எங்கோ ஜோதிக்கு ஒலிப்பானேன்? அதில் ஓர் அந் தரங்கக் கதை அடங்கி இருப்பதை அவளே அறிவாள்.

''சுவாமீ!''

இராமதேவர் கண் மலருகிறார்.

ஆ! அந்தக் கண்களில் என்னே பிரகாசம்!

''என் கையால் உணவெடுக்கலாம் அல்லவா?''

ஜோதி, நீண்ட வாழை இலை விரித்து உணவு படைக்கிறாள். உடனிருந்து உதவ வல் லரசியை அழைக்கலாமா என்று எண்ணு கிறாள். வேண்டாமே!

அற்புதமான காய்கறிகளுடன் கூடிய பதார்த்தங்கள். நெய் மணக்க மணக்கச் சமை யல்.

சுவையான சமையலைக் கண்டு பாராட்டு கிறார் இராமதேவர்.

''நீயே சமைத்ததா ஜோதி?''

''கொத்து மல்லியைக் கழுவுவதுகூட எனது கையாலேயே கழுவிச் சமைக்க வேண் டும் என்று சமைத்த சமையல்!''

''ஓகோ! ஜோதி! இப்போது அன்பால், அறப்பயனால் என்னுடன் இரண்டறக் கலந்து விட்ட ஜோதி நீ! அகத்துக்குரியவள் என்பதை நீக்கி ஏனைய அனைத்துக்கும் உரியவளாகி றாய்! நீ பதியிலார் வகுப்பைச் சார்ந்த வளா?''

''தேவதாசியா என்று கேட்டிருக்கலாமே! நான் ஓதுவார் குடியில் வந்தவள். ஆனால் அன்னை. என்னை எடுத்து வளர்த்தவள் தேவ தாசி. அவள் ஒரு சிவ பக்தை. பெரிய நாட்டிய சிரோன்மணி. செல்வச் சீமாட்டி. தவறு செய்வாள். ஆனால் சிவனடியார்களுக் கல்லாது எவனடியையும் தொட்டு வணங்கிய தில்லை. நானறிவேன்!''

ஆச்சரியம் தழுவிய கண்களுடன் கவனிக் கிறார் இராம தேவர்.

உண்டு முடித்ததும் கையலம்பித் துடைத் துக் கொள்கிறார்.

''சுவாமீ! இந்த அடியாள் ஒன்றை யாசிக்க லாமா?''

''என்ன ஜோதி?''

''இந்த இலையில் நான் உண்ணலாமா?''

''எச்சில் இலையிலா?''

''தமிழ் இலையில்.''

''நான்தான் சொன்னேனே....! இரண் டறக் கலந்துவிட்டவள் என்கிற விளக்கத்தை மனத்திலிறுத்தி நீ உண்பாயேயானால் எனக்கு அட்டியில்லை.''

''நான் இதனை மட்டும் யாசிக்கவில்லை; இன்னொன்றையும் சேர்த்தே யாசிக்கிறேன். ஒவ்வொரு மாத ரேவதி நட்சத்திரத்தின் போதும் இந்தப் பாக்கியம் எனக்குக் கிடைக்க வேண்டும்.''

பலகணங்கள் யோசிக்கிறார் இராமதேவர்.

''மனத்தூய்மையுடன்தானே கேட்கிறாய்?''

இராமதேவர் கண்களை அகல விரித்துக் கவனிக்கிறார்.

''சுவாமீ! என்னைப் புரிந்துகொள்ள முடிய வில்லையே என்று நீங்கள் பார்க்கிற பார்வை எனக்குப் புரிகிறது. என்னைப் புரிந்து கொள்ள முடிந்த ஒரே உருவம் நானேதான்! உங்கள் எச்சில் இலையில் உண்ண யாசிப் பது ஈசனை மறவாமல் இருக்க; ஈசன் தொண்டே நாட்டியத் தொண்டு; அது நீசத் தொண்டாகிவிடக் கூடாது என்பதற்காக! அதே நேரத்தில் என்னுள் ஒரு கதை இருக் கிறது. ஆனால் அது ஒழுக்கம் நிறைந்த கதை! உங்கள் நிழல் என் மீது பட்டபிறகு என் மீது என்ன? எவர் மீது பட்டாலும் அவர் ஒழுக்கத்தை உயிரினும் ஓம்புவர்.''

மேலும் புரிந்து கொள்ள முடியாத அள வுக்கு மயக்கம் காணுகிறார் இராம தேவர். மனத்தில் ஏதோ ஒன்று அரும்ப அதனையும் கேட்டுவிட்டார்.

''ஜோதி! எனது இந்தத் தூயதான அன்பை யே ஏணியாகக் கொண்டு ஏறி, பாண்டிய நாட்டுக்கு அழைத்துச் செல்லத் தீர்மானிக்க மாட்டாயே?''

ஜோதியின் கண்கள் மோதிக் கொள் கின்றன.

(தொடரும்)

* மெய்ப்பொருள் நாயனார் புராணத்தில் சேக்கிழார் வரிகள்.

# இயற்கையின் அழகில் இறைவனைக் கண்டு...

## 16

ஸிட்னி ஆப்பரா ஹவுஸ் முற்றிலும் நவீன பாணியில் கட்டப்பட்டிருக்கிறது. மூன்று புறமும் கடல் நீர் அணைக்க, பாய் மரம் விரித்த படகின் அமைப்பில் வெள்ளை வெளேரென்று, நீல வானின் பின்புலத்தில் ஜொலிக்கிறது.

1957 இல் டென்மார்க்கைச் சேர்ந்த ஜான் அட்ஜோன் என்ற இளம் கட்டிடக் கலை நிபுணர், ஆப்பரா ஹவுஸுக்கென்று ஆஸ்திரேலிய அரசு வைத்திருந்த வரைபடப் (டிஸைன்) போட்டியில் பரிசு பெற்றாராம். ஜான் அட்ஜோன் ஆஸ்திரேலியாவைப் பார்த்திராதவர். ஸிட்னி துறைமுகத்தைக் கற்பனையில் கண்டு, படகோட்டுவதில் ஆர்வம் கொண்ட அவர், கட்டிடத்திற்கு ஒரு பிரும்மாண்ட படகின் வடிவம் கொடுத்திருக்கிறார்.

"மிஸஸ் ஏவா ஹப்பல்லைச் சந்தியுங்கள்!" என்றார் வாலஸ். "ஸிட்னி ஆப்பரா ஹவுஸின் பொது ஜனத் தொடர்பு அதிகாரி."

வெகு உற்சாகமாக என்னை வரவேற்றார் மிகச் சுறுசுறுப்பாகத் தெரிந்த ஏவா. "ஆப்பரா ஹவுஸைப் பற்றி ஏவா மிக அழகிய புத்தகம் எழுதியிருக்கிறார். இந்த இடத்தோடு ஐக்கியமானவர். இதைச் சுற்றிக் காண்பிக்க இவரை விடத் தகுதியானவர் இருக்க முடியாது" என்றார் வாலஸ்.

° தரிங்கல் தேசியப் பூங்கா.



° ஆஸ்திரேலியாவுக்கே உரிய பறவைகள்...

# கிழக்கே ஓர் உலகம்

வாஸந்தி

''இந்தக் கட்டிடம் கட்டி முடியும் வரை நித்தியம் அரசு கண்டனக் குரல்களைக் கேட்க வேண்டியிருந்தது'' என்றார் ஏவா. 'வெள்ளை யானை' என்று அதன் செலவைக் குறித்துப் பத்திரிகைகள் கண்டித்தன. ஆப்பரா ஹவுஸ் என்ற பதமே கேலிக்குரிய பதமாகப் போயிற்று!''

ஆனால் அது பழங்கதை. இப்பொழுது நிச்சயம் யாரும் வாயைத் திறக்க முடியாது. அப்படிப்பட்ட உயர்ந்த சாதனையாக இன்று கருதப்படுகிறது. உள்ளே ஐந்து தனித்தனி அரங்கங்கள், ஒவ்வொன்றும் 5,500 இருக்கைகளைக் கொண்டது. தவிர, கண்காட்சிக் கூடம்,வரவேற்புக்கூடம்,எண்ணற்றலௌஞ்சுகள், ஐந்து ஒத்திகை ஸ்டுடியோக்கள், நாற்பது ஒப்பனை அறைகள், ரெஸ்டாரண்டுகள், பார்கள், கான்டீன்கள், வாசக சாலை, அலுவலகங்கள், சமையலறைகள், விக் (Wig) அறைகள், இத்யாதி... இத்யாதி.... முன்பின் பழக்கமில்லாதவர்கள், நுழைந்துவிட்டால் சென்னை அண்ணா நகரில் வீடு கண்டுபிடிப்பது போல் திக்கு திசை புரியாது திணறிப் போவார்கள்.

அன்று மாலைக்கான நாடகத்துக்கு என்னிடம் இரண்டு டிக்கெட்டுகள் கொடுக்கப்பட்டிருந்ததால் நான் சுபத்திரா லோகேசன் பிள்ளையையும் அழைத்துக் கொண்டு சென்றேன். போய்ச் சேர ஐந்து நிமிஷம் தாமதமாகிவிட்டது. அரங்கத்தின் வாயிலில் உள்ளே நுழைய முடியாது என்ற அறிகுறியுடன் சிவப்பு விளக்கு எரிந்தது! என்னைப் போல வேறு சிலரும் வெளியில் நின்றிருந்தார்கள். யாரும் உள்ளே விடும்படி கெஞ்சிக் கேட்கவில்லை. என்னிடம் இருந்தவை முதல் வகுப்பு டிக்கெட்டுகள்.

கதவருகில் இருந்தவர், ''ஸீன் மாறும் போதுதான் உள்ளே விடுவோம்'' என்றார். பதினைந்து நிமிஷம் கழித்து உள்ளே விட்டார்கள். அப்பொழுதும்எங்களைஸீட்டில்உட்கார அனுமதிக்கவில்லை. தாமதமாக வந்தவர் எல்லாரும்இடைவேளை வரை பின்னால்நின்றபடி நாடகத்தைப் பார்த்தோம். யாருக்கும் தனிச் சலுகை காட்டப்படவில்லை. அதை யாரும் எதிர்பார்க்கவும் இல்லை. தண்டனையை வாயை மூடிக் கொண்டு ஏற்று நின்றார்கள்,

ஆஸ்திரேலியப்பெண் எழுத்தாளர் சங்கமும் The Fellowship of Australian Writers என்ற சங்கமும் எனக்கு வரவேற்பளித்தன. என்னை வரவேற்ற பெண் எழுத்தாளர் சங்கக் காரியதரிசி ஹில்லேர் லிண்ட்ஸே. கவிதைகளும் குழந்தை இலக்கியமும் எழுதுபவர். பல பரிசுகளைப் பெற்றவர். அவருடன் இருந்த பெண் எழுத்தாளர்கள் எல்லாருமே சற்று வயதானவர்களாகக் காணப்பட்டார்கள்.

''உங்கள் அமைப்பில் இளம் எழுத்தாளர்கள் இல்லையா?'' என்று தயக்கத்துடன் திருமதி லிண்ட்ஸேயைக் கேட்டேன்.

''மிகக்குறைவு. அவர்கள் எல்லாம்பொதுவாகத் தீவிர ஃபெமினிஸ்டுகள். நாங்கள் அவர்களுடன் சம்பந்தம் வைத்துக் கொள்வதில்லை. நாங்கள் மிதவாதிகள்'' என்றார் லிண்ட்ஸே.

''அப்படியென்றால் பெண் சுதந்திர இயக்கத்தில் உங்களுக்கு நாட்டமில்லைஎன்று அர்த்தமா?''

''கண்டிப்பாக உண்டு. ஆஸ்திரேலியாவில் அன்றிலிருந்து இன்று வரை பெண்கள் இரண்டாம் பட்சமாகவே கருதப்பட்டு வருகிறார்கள். இதை நாங்களும் கண்டிக்கிறோம். இதோ பாருங்கள்! இந்த டாலர் நோட்டை!'' என்று லிண்ட்ஸே ஒரு ஐந்து டாலர் நோட்டைக் காண்பித்தார். 'ஆஸ்திரேலியக் கம்பளியின் பிதா' என்று மக்கார்தி என்பவர் பெயரும் அவருடைய உருவமும் இருந்தது. ''உண்மையில் பாடுபட்டதெல்லாம் அவருடைய மனைவி! மக்கார்தி அடிக்கடி வெளிநாடுகளுக்குப் போய்விடுவார். அவருடைய மனைவிதான் பல வித சோதனைகளைத் தனியாகச் செய்து தரமான கம்பளி கொடுக்கக் கூடிய ஆடுகளை வளர்த்தார். இந்த மாதிரி நிறைய உதாரணங்கள் சொல்லலாம். ஆனால் இன்றைய தீவிர ஃபெமினிஸ்டுகளின் கதை வேறு. அவர்கள் இயற்கையை எதிர்க்கிறார்கள். ஆண்களின் சம்பந்தமே வேண்டாம், இனவிருத்தியே வேண்டாம் என்கிற அளவுக்குத் தீவிர வாதிகள். இவர்களில் பெரும்பாலோர் லெஸ்பியன்ஸ். இவர்களுக்கு ஆரோக்கியமான மனநிலை உடைய ஆஸ்திரேலியப் பெண்களின் ஆதரவுமில்லை; ஆண்களின் ஒத்துழைப்பும் இல்லை.''

பிரபல ஸ்னூக்கர் விளையாட்டு வீரரான ஹோரேஸ் லிண்ட்ரும்மின் மனைவி ஜாய். ஹோரேஸின் பெயரில் வெளிவந்த எல்லாப் புத்தகங்களையும் உண்மையில் எழுதியவர் ஜாய். ஆனால் புத்தகத்தில் ஜாயின் ஒத்துழைப்புக்கு நன்றி என்று கூட ஒரு வரியும் இருக்காதாம். ஜாய் இதைப் பொருட்படுத்தியதில்லை. ஹோரேஸ் இறந்த பிறகு, உண்மை எல்லாருக்கும் தெரிய வந்த போது, ஒரு பெண், ''உங்கள் கணவர் உங்களுக்கு இழைத்திருக்கும் அநீதிக்கு நீங்கள் என்றுமே கோபப்பட்டதில்லையா?'' என்று கேட்டிருக்கிறாள். ''அதற்குப் பிறகுதான் எனக்கு அந்த அநீதி உறைத்தது'' என்றார் ஜாய்.

இவ்வாறு பெண்களுக்கு இழைக்கப்பட்டு வந்த அநீதிகளை சகஜமாக ஏற்றுக் கொண்டு



* ஆப்பரா ஹவுஸின் ஒரு பகுதியில் மாலை நேரத்தில் இயங்கும் திறந்தவெளி உணவு விடுதி.

வந்த ஆஸ்திரேலியப் பெண்கள் பலர் இன்று விழிப்புணர்ச்சி பெற்றுப் போராட்டத்துக்குத் தயாராகியிருக்கிறார்கள்.

இந்திய தூதரகக் கான்ஸல் — ஜெனரல் ஏ. கே. பானர்ஜியின் தலைமையில் ஸிட்னியில் இருக்கும் முக்கிய இந்தியர்களின் சார்பாக டாக்டர் முத்துகிருஷ்ணன் தம் வீட்டில் எனக்கு விருந்து கொடுத்தார். டாக்டர் முத்துகிருஷ்ணன் தம்பதியின் அரண்மனை போன்ற வீடும், அலங்காரங்களும் கண்ணைப் பறித்தன. ஆஸ்திரேலியாவில் ரோல்ஸ் ராய்ஸ் வைத்திருக்கும்ஒரே இந்தியர் என்று அவரைப் பற்றி ஒருவர் விமர்சித்தார். ''இந்தியாவுக்குத் திரும்பும் எண்ணம் இருக்கிறதா?'' என்று முத்துக்கிருஷ்ணனைக் கேட்டேன்.

''இல்லவே இல்லை!'' என்றார் அவர் தீர்மானமாக. ''எனக்கு வாழ்வளித்த இடம் ஆஸ்திரேலியா. வாழ்வளிக்க மறுத்தது இந்தியா. மருத்துவப் படிப்பு முடிந்ததும் ஓர் இடத்திலும்எனக்கு நல்ல வேலை கிடைக்கவில்லை. கிடைத்த சம்பளம் என் ஒருத்தனுக்கே போதவில்லை. ரொம்ப வெறுத்துப் போய் இங்கு மேல் படிப்புக்கு விண்ணப்பித்து நூறு டாலர்களுடன் வந்து சேர்ந்தேன். மேல் படிப்பைத் தொடர முடியவில்லை. ப்ரைவேட் ப்ராக்டிஸ் ஆரம்பித்தேன். பதினைந்தே வருஷங்களில்எல்லாரும்பிரமிக்கும் அளவுக்கு முன்னேறி விட்டேன். இந்தியாவில் இப்படி ஒரு வாழ்க்கையைக் கனவிலும் அடைய முடியுமா?'' என்றார்.

ஆஸ்திரேலிய பிராட்காஸ்டிங் கார்ப்பரேஷனில், தமிழ்ப் பிரிவில் வேலை பார்க்கும் தேவி பாலசுப்பிரமணியன் என்ற இலங்கைத் தமிழர், விருந்தில் என்னைச் சந்தித்துத் தங்கள் தமிழ் ஒலிபரப்புக்கு நான் பேட்டி தர வேண்டும் என்றார். முத்துக்கிருஷ்ணனே என்னைப் பேட்டி காண இசைந்தார்.

ஒரு வார இறுதியைத் திரு ராம் — ராஜலக்ஷ்மி தம்பதியுடன் கழித்தேன். திரு ராம் இந்தியாவிலிருந்து ஸிட்னிக்கு ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷன் வேலையாகச் சென்றவர். ஆஸ்திரேலியா ரொம்பவும் பிடித்துப் போனதில் இந்தியாவுக்குத் திரும்பாமல் அங்கேயே வேறு வேலை பிடித்துத் தங்கி விட்டார். அவர்களுடைய இரண்டு பெண்களும் ஆஸ்திரேலியர்களை மணந்திருக்கிறார்கள், பெற்றோர்களின் மனப்பூர்வமான சம்மதத்துடன்.

''வெளிநாட்டில் தங்கத் தீர்மானித்த பிறகு, குழந்தைகளும் அந்த நாட்டுப் பிரஜைகளாகிப் போன பிறகு நாம் சில யதார்த்தங்களைப் புரிந்து கொள்ளத்தான் வேண்டும்'' என்றார் ராம். ''நமது மரபுகளைக் காப்பாற்ற வேண்டியதுதான். ஆனால் அவை நம்மையும் குழந்தைகளையும் யதார்த்தத்துக்கு விரோதமாகக் கட்டுப்படுத்துவதாக அமைந்துவிடக் கூடாது. இந்த விஷயத்தில் விட்டுக் கொடுக்காத அயல்நாட்டு இந்தியர்கள் மனக்கஷ்டத்துக்குள்ளாகிறார்கள்.''

அவர்களது அழகிய கச்சிதமான வீடு



ஓர் அமைதியான எழில் நிறைந்த பகுதியில் இருக்கிறது. காலையில் எழுந்து தோட்டத்தைச் சுற்றும்போது ஆஸ்திரேலியாவுக்கே பிரதானமாக உரியதான வெள்ளைக் கிளிகளும் வேறு பல அழகிய பறவைகளும் மரங்களில் சல்லாபித்துக் கொண்டிருந்தன.

காலை ஆகாரத்தை முடித்துக் கொண்டு நாங்கள் அருகிலிருந்த கடற்கரைகளையும் மலர்ப்பூங்காக்களையும் பார்க்கச் சென்றோம். கடற்கரை அழகாக சந்தடியற்று இருந்தது. மறுபுறம் பசுமையான வனம். ஆஸ்திரேலியாவில் மட்டுமே காணக் கூடிய மலர்கள், பறவைகள். வனத்தை ஊடுருவிய வழவழப்பான சாலை. இடையிடையே அறிவிப்புப் பலகைகள்: ''கங்காருகள் குறுக்கே ஓடலாம்; கவனித்து ஓட்டுங்கள்!'' அவை எச்சரித்தவாறே நாங்கள் செல்லும்போது கங்காருகள் சில தெருவைக் குறுக்கே கடந்து சென்றன. கங்காருகளைக் கொல்வது ஆஸ்திரேலியாவில் பெருங்குற்றம்.

''குரிங்கய்'' என்ற காட்டு மலர்ப் பூங்காவிற்குச் சென்றோம். ஆஸ்திரேலியாவுக்கு மட்டுமே உரிய காட்டு மலர்களைப் பாதுகாக்கவென்றே தனித்து ஒதுக்கப்பட்ட இயற்கைப் பூங்கா இது. ஸிட்னியின் ஆரம்பகால நிலப்பரப்பு எப்படி இருந்தது என்பதற்கு உதாரணமாக இதை 1894 லேயே தேசியப் பூங்காவாகச் செய்தார்களாம். 15,000 ஹெக்டேர்கள் பரப்பில் சமுத்திரத்தை ஒட்டிய மேடான பகுதியில் அமைந்த இந்த அடர்ந்த காடு அற்புத அழகுடன் விளங்குகிறது. பகுதி பகுதியாக வனத்தின் எழிலை ரசிக்க வசதியாக ஏகப்பட்ட பாதைகள் ஊடுருவுகின்றன. ஆங்காங்கே காட்டுத் தீயைத் தவிர்க்க No Smoking என்ற அறிவிப்புப் பலகைகள். வல்லபி, கோலா, பாண்டிகூட், கூக்காபூரா கிளிகள் என்று பறவைகளில் நூற்றுக்கணக்கான விதங்கள்.

**Trail of the senses** என்று ஒரு பாதை. ''சற்று நின்று கவனி'' என்றார் ராஜலக்ஷ்மி. ''மரங்களின் வாசனையும் பேச்சும், ருசியும், சோகமும், சிரிப்பும் கூடப் புலப்படும்...''

நான் கட்டுண்டவள்போல் நின்றேன். மரங்கள் கிசுகிசுத்தன. சல்லாபித்தன. மனோகரமான மணத்தைப் பரப்பின. நான் தெய்வ சன்னிதானத்தில் இருப்பதை உணர்ந்தேன்.

(தொடரும்)

வாசகர் பங்கு

# குழந்தையைத் திருத்தினேன்



### தோரணையை விட்டுவிட்டு...

இரவு ரோந்துப் பணியில் ஈடுபட்டிருந்த நானும் மற்றுமோர் காவலரும் பேருந்து நிலையத்தை வந்து அடைந்தோம். அங்கே சந்தேகத்துக்கு இடமளித்த ஒரு பையனைப் பிடித்து விசாரித்தோம். ஒழுங்காகப் படிக்கவில்லை என்று பெற்றோர் கண்டித்ததால் ஊரை விட்டு ஓடி வந்துவிட்டான் என்று அறிந்தோம். போலீஸ் தோரணையை விட்டுவிட்டு அவனிடம் கனிவுடன் பேசினோம். சிறு வயதிலேயே தவறு செய்ததற்காகச் சீர்திருத்தப் பள்ளிக்குச் சென்று திரும்பும் குழந்தைகளுக்குச் சமூகத்தில் கிடைக்கும் அவமரியாதையைப் பற்றி எடுத்துச் சொன்னோம். அவனைப் பெற்றோரிடம் சேர்க்கவும் ஏற்பாடு செய்தோம். இனி ஒழுங்காகப் படிப்பதாக அவன் சொன்ன போது மனத்துக்கு ஆறுதலாக இருந்தது.

— கே. சேகர், பாண்டிச்சேரி—1.

### சில்லறைப் பிரச்னை இல்லை!

என் தங்கை பிள்ளை, வீட்டில் வைக்கும் சில்லறையைச் சொல்லாமல் கொள்ளாமல் எடுத்து விடுவான். ஐந்து வயதுச் சிறுவனுக்கு ஏற்பட்ட இந்தக் கெட்ட பழக்கம் அன்றாடமும் பெற்றோரிடம் அடி உதை வாங்கிக் கொடுத்தது. நான் அவனுக்கு ஓர் உண்டியலை வாங்கித் தந்து, தினம் தினம் சிறிது சில்லறையைக் கொடுத்து அதில் போட்டு வரச் சொன்னேன். தேவையான போது என்னைக் கேட்டுவிட்டு அதிலிருந்து எடுத்துக் கொள்ள ஆரம்பித்தான். சில்லறைத் திருட்டு நின்று போயிற்று. இப்போது சேமிப்புப் பழக்கம் நன்றாகப் படிந்துவிட்டது. உண்டியலில் இருக்கும் சில்லறையை எடுக்கவே யோசிக்கிறான்.

— என். எஸ். கோபாலகிருஷ்ணன்,
சென்னை—4.





## இனிமேல் துணிதான்...!

என் மகன் துணி, ஷர்ட், காலர் என்று எதையாவது கடித்துக் கொண்டே இருப்பான். கண்டித்தால் வீம்புக்காக அதிகம் கடிப்பான். யோசித்தேன்... ஒரு நாள் எல்லோருக்கும் டிபன் கொடுத்த போது அவனுக்கு மட்டும் தட்டில் துணியும் பேப்பரும் வைத்துக் கொடுத்தேன். ''எனக்கு இட்லி?'' என்றான். ''உனக்கு இதுதான் இனிமேல் சாப்பாடு. பள்ளிக்கூடத்துக்கும் டிபன் டப்பியில் துணித் துண்டுகளைத்தான் வைத்து அனுப்பப் போகிறேன். நீதான் துணியை நன்றாகத் தின்பாயே!'' என்றேன். துணியைக் கடிக்கும் பழக்கத்தை அன்று முதல் அவன் விட்டுவிட்டான்!

— விஜயா சுந்தர், ஹைதராபாத்—29.

## விட்டல் வாக்கே வேதம்!

எனக்குத் தினமும் சாப்பாட்டில் கீரை வேண்டும். என் பிள்ளைகளுக்கோ கீரையைக் கண்டாலே பிடிக்காது! ஒரு நாள், உதவி வேளாண்மை இயக்குனராகப் பணியாற்றும் எனது நண்பர் மு. விட்டல் 'அன்றாடம் கீரை' என்ற தமது புத்தகத்தை எனக்குப் பரிசாக அளித்தார். எங்களுடன் சாப்பிடும் போதே கீரையின் மகிமையைத் தெளிவாக விளக்கினார். இதைக் கேட்டுவிட்டுப் புத்தகத்தையும் படித்த என் பிள்ளைகள் இப்போது கீரைக்கு முணுமுணுப்பதேயில்லை!

'— டி. ரங்கநாதன், சென்னை—41.

## நெய்ல் பாலிஷுக்கு நன்றி!

யார் சொல்லியும் கேட்காமல் நகத்தைக் கடித்து வந்த என் பெண்ணை எப்படித் திருத்துவது என்று புரியாமல் தவித்தேன். கடைசியில் நெய்ல் பாலிஷ் ஒன்று வாங்கிக் கொடுத்தேன். அதைப் பூசுவதற்கென்றே நகங்களை வளர்த்தாள். நாளாவட்டத்தில் நகம் கடிக்கும் பழக்கம் அறவே நின்று போயிற்று.

— வி. ராதா, கூத்தாநல்லூர்.

## ராமானுஜம் கை கொடுத்தார்!

ஆங்கிலம், தமிழ், சரித்திரம், விஞ்ஞானம் என்று எல்லாப் பாடங்களிலும் ஆர்வம் காட்டி நல்ல மதிப்பெண்கள் வாங்கிய என் மகனுக்குக் கணிதம் மட்டும் 'அலர்ஜி'யாக இருந்தது. அவனுக்குக் கணிதமேதை ராமானுஜத்தின் வாழ்க்கை வரலாற்று நூலை வாங்கிக் கொடுத்தேன். அதை மிகுந்த ஆவலோடு ஒரே மூச்சில் படித்து முடித்தான். அதற்குப் பிறகு அவன் வாழ்க்கையில்தான் எத்தகைய மாற்றம்! அரையாண்டுத் தேர்வில் அவன் வகுப்பில் அவன்தான் முதல்!

— ராஜீவி நரசிம்மன், கடலூர்—1.

## சிந்திக்க வைத்த யதார்த்தம்

பார்க்கும் பொருள்களையெல்லாம் வாங்கித் தரச் சொல்லி அடம் பிடித்து, ஆர்ப்பாட்டம் செய்து, வீண் செலவுக்கு வழி செய்து வந்தாள் என் மகள். அவளை எப்படித் திருத்துவது என்று புரியாமல் திணறினேன். சிவகாசியில் நடந்த உறவினர் வீட்டுத் திருமணத்துக்குப் போன போது, அங்கு தீப்பெட்டித் தொழிற்சாலையை என் மகளுக்குச் சுற்றிக் காண்பித்தேன். அவள் வயதை ஒத்த குழந்தைகள் கடுமையாக உழைப்பதைப் பார்த்தாள். அவர்களுடைய வறுமை நிலையைப் பற்றி விளக்கினேன். அன்று முதல் என் மகள் மனம் மாறிப் போனாள். பிடிவாதம் வெகுவாகக் குறைந்து விட்டது.

— எஸ். சுந்தர்ராஜ், மதுரை.

## நேசிக்கக் கற்றுத் தந்தேன்

என் செல்வ மகள் எந்தப் பொருளையும் பகிர்ந்து கொள்ள மாட்டாள். அவள் ஏதேனும் சாப்பிடும்போது பக்கத்து வீட்டுக் குழந்தை வந்து கைநீட்டிக் கேட்டால் கூடத் தரமாட்டாள். நான் அவளை வெளியே அழைத்துப் போகையில் உடல் ஊனமுற்றோர் மற்றும் பிச்சைக்காரர்களுக்குக் காசு கொடுக்கும்போது, அவள் கையில் கொடுத்துத் தரச் சொன்னேன். இப்படி உதவுவதின் அவசியத்தை அவளே கேட்டபோது விளக்கிச் சொன்னேன். இன்றைக்கு அவள் மற்றவர்களை நேசிக்கத் தெரிந்து கொண்டிருக்கிறாள்.

— எஸ். சங்கரசுப்பு, திருச்செந்தூர்.

## நானே முன்னுதாரணம்

படு சுட்டியாக இருந்தும் படிப்பில் நாட்டமே இல்லாமல் இருந்தாள் என் மகள். ''படி! படி!'' என்று திரும்பத் திரும்பச் சொல்வதில் பயனில்லை என்று அறிந்து நானே அவளுக்கு முன்னுதாரணமாக இருப்பது என்று முடிவு செய்தேன். திருமணத்திற்கு முன் பள்ளியிறுதி வரை படித்திருந்தவள் அஞ்சல் மூலம் பட்டப் படிப்பை மேற்கொண்டேன். விளைவு — என் மகளும் படிக்க ஆரம்பித்தாள்! இன்று நான் ஒரு M. A.! அவள் B. Com. படித்துக் கொண்டிருக்கிறாள்!

—ஸ்வர்ணா கிருஷ்ணசாமி, சென்னை—38.

## பொறுப்பைக் கொடுத்துப் பாருங்கள்!

தின்பண்டங்கள் ஏதேனும் வாங்கி வந்து என் மூன்று குழந்தைகளுக்கும் பகிர்ந்து கொடுத்தால் சின்னவன் தரையில் உருண்டு புரண்டு அழ ஆரம்பித்துவிடுவான்! வாங்கி வருவதை அவனிடமே கொடுத்துவிட்டால் என்ன என்று யோசித்த நான், அடுத்த முறை அப்படியே கொடுத்து அவனையே மற்றவர்களுக்குப் பகிர்ந்து தரச் சொன்னேன். அந்தப் பொறுப்பு தரப்பட்டதும் அவன் மாறிப் போனான். தனக்குக் கூட வைத்துக் கொள்ளாமல் மற்றவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்து மகிழ்ந்தான்.

— இரா. செல்வசுப்பிரமணியன், நாகர் கோவில்—2.



அவள்: நாலு பிச்சைக்காரங்க ஒண்ணு உட்கார்ந்து சிரிச்சுப் பேசிக்கிட்டிருந்தாப் போதும். உடனே அரசியல்வாதியான என் கணவர் கன்னத்திலே போட்டுப்பார்!

இவள்: ஏன்?

அவள்: ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்பவராச்சே!

— சீர்காழி சாமு.

## இதற்குத் தந்திரம்...

என் குழந்தைக்குத் தினுசு தினுசாக விளையாட்டுச் சாமான்கள் வாங்கிக் கொடுத்திருந்தாலும் அவற்றை வைத்துக் கொண்டு விளையாடாமல் பக்கத்து வீட்டுக் குழந்தையின் சாமான்களைப் பிடுங்கிக் கொள்ளப் போகும். அந்தக் குழந்தை இதை அடிக்க, இது அழ என்று ஏக ரகளை. ஓர் உபாயம் செய்தேன். என் குழந்தையின் எல்லா விளையாட்டுச் சாமான்களையும் பக்கத்து வீட்டுக் குழந்தையிடமே கொடுத்து, "தங்கச்சிப் பாப்பாவைச் சேர்த்துக்கிட்டு விளையாடு" என்று செல்லமாகச் சொன்னேன். அதுவும் 'சரி' என்று தலையை ஆட்டியது. இப்போது இரண்டு குழந்தைகளும் சேர்ந்து விளையாடுகின்றன.

— கீதா ராமன், சீர்காழி — 1.

## நாமும் ஈடுபட வேண்டும்

ஐந்தாம் வகுப்பில் படிக்கும் என் மகனிடம் காலை ஐந்து மணிக்கு எழுந்து படித்தால்தான் மனத்தில் பதியும் என்று சொல்லிப் பார்த்தும் அவன் கேட்கவில்லை. ஒரு நாள் நான் அதிகாலை ஐந்துக்கு எழுந்து அவன் பாடங்களை உரக்கப் படிக்க ஆரம்பித்தேன். சத்தம் கேட்டு விழித்துக் கொண்டு, "நீங்கள் ஏன் என் பாடங்களைப் படிக்கிறீர்கள்?" என்றான். "உனக்குச் சொல்லித் தரத்தான் படிக்கிறேன்" என்றேன். அடுத்த நாள் அவனே ஐந்து மணிக்கு எழுந்துவிட்டான். நானும் அவனுடன் எழுந்து அவனுக்குச் சொல்லித்தர ஆரம்பித்தேன். இப்போதெல்லாம் நல்ல ராங்க் வாங்குகிறான்.

— பி. எம். குமரன், தேனி.

## பூஜைக்குப் பலன்

எதற்கெடுத்தாலும் கோபம், பிடிவாதம் என்று அட்டகாசம் பண்ணி வந்தாள் என் மகள். காலையில் தாமதமாகத்தான் எழுந்திருப்பாள். அவளைத் திருத்த வழி தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தபோது லலிதா ஸஹஸ்ரநாமம் பாராயணம் செய்ய ஆரம்பித்தேன். நான் தினமும் அதிகாலையில் எழுந்து குளித்து, விளக்கேற்றி ஸஹஸ்ரநாமம் சொல்வதைக் கேட்டு அவளும் என்னுடன் எழுந்து லலிதா ஸஹஸ்ரநாமம் சொல்ல ஆரம்பித்தாள். சிறிது சிறிதாக அவள் பிடிவாதமும் கோபமும் இருந்த இடம் தெரியாமல் போயின. இப்போது வீட்டில் நிம்மதியும் சந்தோஷமும்தான்.

— பி. சங்கரராமன், அம்பாசமுத்திரம்.

## குருநானக் கற்றுக் கொடுத்தது

நான் ஆசிரியையாக உள்ள எட்டாம் வகுப்பு மாணவர்களுள் ஒருவன் மிகவும் நல்லவன். ஆனால் ரோஜாவில் முள் போல அவனிடம் திருட்டுக் குணம் இருந்தது. அவனைத் திருத்த ஓர் உபாயம் செய்தேன். அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த மாணவனை விட்டு அவன் பொருள்களுள் சிலவற்றை அவன் அறியாமல் எடுத்து என்னிடம் தரச் சொன்னேன். தன் பொருட்கள் காணாமல் போனதும் பதறிப் போனான் அவன். ஏதும் அறியாதவள் போல் அவன் வாட்டத்திற்கு என்ன காரணம் என்று விசாரித்தேன். அவன் விளக்கினான். "பிறர் பொருளைக் களவாடினால்தான் நம் பொருள் திருட்டுப் போகும். நீதான் மிகவும் நல்ல பையன் ஆயிற்றே!" என்றேன். இதைக் கேட்டவன் தேம்பி அழுதுவிட்டான். தன் தவறுகளை ஒப்புக் கொண்டான். என்னிடம் மனம் திறந்து பேசியதில் ஆறுதல் அடைந்ததோடு திருந்தியும் விட்டான் அந்த மாணவன். அவன் பொருள்களை அவனிடமே திருப்பித் தந்தேன்.

நான் கையாண்ட இந்த உபாயம் குருநானக் வாழ்க்கை வரலாற்றில் படித்தது.

— எம். எஸ். கோமதி, ஆ. தெக்கூர்.

**ப்ளோப்ளாஸ்ட் வழங்கும் வி. ஐ. பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:**

**டி. ரங்கநாதன்,**
**M – 8 – D. MIG ஃப்ளாட்,**
**எல். பி. ரோடு,**
**திருவான்மியூர்,**
**சென்னை — 60 0 0 41.**





# குடைகளின் ஊர்வலம்

விதியை வேக வைத்துக் கொண்டிருக்கிறது வெயில். தளர்ந்து போன கிழவர்கள்கூட தரையின் சூடு தாங்காமல் உருகும் சாலையில் ஓட்டப்பந்தயம் நடத்திக் கொண்டிருக்கிறார்கள். கோடைக் காலத்தின் குறும்பை ரசித்தபடி நடந்து கொண்டிருக்கிறேன் நான். இந்தக் கோடை வெயிலின் மீது எனக்குக் கோபம் வரவில்லை. ஏனென்றால் — இன்னும் கூட என்னுடைய மனத்தில் மறந்து போகாமல் 'அந்த மழைக்காலம்' நிற்கிறது. இப்போதும் கூட அந்தப் புயல் என்னுள் புரண்டு படுக்கிறது. எதிர்மறையாக இப்போது எண்ணிப் பார்க்கிறேன் நான்.

கொஞ்ச நாளாகவே இங்கு
குடைகள் நடத்தும்
குட்டி ஊர்வலம்!
*

வானம் கிழிந்துவிட்டது —
தடுமாறிப் போன
தண்ணீர்த் தையல்காரன்
வானத்தைத் தைக்காமல்
பூமியைத் தைத்தான்.
தூங்கிக் கொண்டிருந்த
தோகையாம் பூமியைத்
துளைத்தன ஊசிகள்!
*

காயம்பட்ட பூமியின்
கண்ணீரும் ரத்தமும்
இன்னும்
தேங்கிக் கிடக்கிறது —
தெருவெல்லாம்!
*

நகரத்துக்குள் — கடல்
நடந்து வந்த மாதிரி
வீதியெல்லாம் வெள்ளம்...
*

முடிந்து வைத்த
வெள்ளத்தை
அவிழ்த்து விட்டவர்கள்
யார்?
வானப் பானையில்
பிடித்துவைத்ததண்ணீரைக்
கவிழ்த்துவிட்டவர்கள் யார்?
*

பாதைகள் ஓடைகளாய்...
மேகங்கள் சேனைகளாய்...
தடுக்கவே முடியாத
தண்ணீரின் படையெடுப்பு!
*
இப்போது
வாழ்க்கை இங்கே
உயிர்களின்
வரவு செலவுக் கணக்கை
வாசித்துக் கொண்டிருக்
கிறது.
*

பள்ளிக் கூடங்களெல்லாம்
படிக்கப் பயன்பட்டதுபோய்
ஏழைகள்
படுக்கப் பயன்படுகின்றன!

சாலைகள் இப்போது
குண்டும் குழியுமாய்...
மேக்கப் கலைக்கப்பட்ட
நடிகைகள் மாதிரி
காண்டிராக்டர்களின்
கதை சொல்கின்றன...
*

குவளை நீருக்காகக்
கவலைப்பட்டது போய் —
இப்போது
தண்ணீரைப்
பார்க்கவே
பயமாக இருக்கிறது.
*

இந்தத் தண்ணீர்
சுட்டெரிக்கும் நெருப்பை
நல்லவனாக்கிவிட்டது.
ஆமாம் —
நெருப்பு
நெருங்கியதுமே தண்டித்து
விடுகிறது.
தண்ணீர்தான்
தட்டிக் கொடுத்தும் தழுவி
யணைத்தும்
கடைசியில் தனது
கைவரிசையைக் காட்டுகிறது.

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1986

தமிழ் உரைநடை இலக்கியத்தின் மறுமலர்ச்சிக்குக் காரணமானவராக விளங்கி பட்டி தொட்டிகளிலெல்லாம் கூடப் பத்திரிகை படிக்கும் பழக்கத்தை உருவாக்கிய அமரர் ''கல்கி'' அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் கல்கி நடத்தும் சிறுகதைப் போட்டி இது:



| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ. | 1000 |
| இரண்டாவது பரிசு | ரூ. | 500 |
| மூன்றும் பரிசு (இரு கதைகளுக்கு தலா ரூ. 250 வீதம்) | ரூ. | 500 |

ஆக மொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

* கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் வேறு எந்த உருவிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

* அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தர வேண்டும்.

* நடுவர் குழு கதைகளைப் பரிசிலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசி தேதி: ஜூன் 15**

* உறையின்மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

* பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

* கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

* எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

* சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

* போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 3 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

* எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

ஆசிரியர், கல்கி, சென்னை — 600 032.

# இதோ ஒரு புதுமை! கண்ணைக் கவரும் வண்ணங்களில் சேலைகளை பொருத்தமான ரவிக்கைத் துணியுடன் கோ-ஆப்டெக்ஸ் உங்களுக்கு வழங்குகிறது

புடவைகளை வாங்கிய பின் பொருத்தமான ரவிக்கைத் துணிகளைத் தேடி அலைய வேண்டிய அவசியமில்லை, இப்போது!

கோ-ஆப்டெக்ஸ் பருத்தி புடவைகளை அவற்றிற்குப் பொருத்தமான வண்ணங்களில், டிசைன்களில் ரவிக்கைத் துணிகளையும் இணைத்து உங்களுக்கு வழங்குகிறது!

சிறப்புத்
20%-40%
தள்ளுபடி



கோ-ஆப்டெக்ஸ்
கைத்தறி

**விஜயம் செய்யுங்கள்!**
**32வது கைத்தறி இருவாரக் கண்காட்சி**

1986 ஏப்ரல் 27 முதல் மே 11-ந் தேதி வரை
கோ-ஆப்டெக்ஸ் கண்காட்சி மைதானம்,
350, பாந்தியன் சாலை,
எழும்பூர், சென்னை-600 008.

Efficient/DIPR

# அந்த 49 கிராமங்களின் கதி என்ன?

கவர் ஸ்டோரி'யின் ஆழமான சோகத்தில் மனம் கனத்துப் போய்விட்டது: இப்படிப்பட்ட கிராமங்களையும் அவற்றில் ஆயிரமாயிரம் பிரச்னைகளுடன் வாழும் மக்களையும் வைத்துக் கொண்டு 'உலகத் தமிழ்ச் சங்க விழா' போன்ற விழாக்களைக் கொண்டாட அரசுக்கு எப்படித்தான் மனம் வருமோ?!

திருமருகல். எம். பிரபாகரன்.

* 'த்ரீ-டி எஃபக்ட்' தந்த, பனைமர அட்டைப்படம் எங்களை வரத்துக்கரை கிராமத்துக்கே அழைத்துச் சென்று விட்டது.

கோவை. உமார்த்தி.

* பெரியார் மாவட்டத்தில்தான் எத்தனையெத்தனை பிரச்னைகள்! சமுதாயச் சீர்திருத்தத்தில் கல்கி முன்னின்று முனைப்போடு செயல்பட்டுக் குறைகளைக் களைய எடுத்து வரும் நடவடிக்கைக்குப் பாராட்டு!

தா. நா. பாளையம், ராஜுவேல் மைந்தன்.

* 'ஈரோடு நகரம் ஒரு ரவுண்ட்' கட்டுரையில் "மஞ்சள் சாதமாக இருந்தால், 'மஞ்சள் செலவு' மிச்சம்தானே" என்று 'கமெண்ட்' அடித்திருப்பது வெந்த புண்ணில் வேல் பாய்ச்சியது போலிருந்தது! நகைப்பூட்டும் வேதனையில் நகைப்பூட்டுகிறீர்களே! இது நியாயமா?

மதுரை. போடி ரவிராஜ்.

* மக்களின் குறைகளைச் சுட்டிக் காட்டியுள்ள 'கல்கி' சில குறைகளுடன் வெளிவந்திருப்பது கண்டு வியப்படைந்தேன்.

'தண்ணீரை எதிர்பார்த்துத் தவமிருக்கிறார்கள் பேட்டியில் சென்னிமலையில் விரிவாக்கப் பகுதியில் உள்ள அம்மாப்பாளையம் என கூறியுள்ளீர்கள். இவர்களின் குடிநீர் பிரச்னைகளைப் பற்றி மாவட்ட கலெக்டருடன் பேசுகையில் அம்மா பேட்டை என கூறியுள்ளீர்கள். அம்மாப்பாளையம் என்பதே சரி.

தவசியப்பன் பேட்டியில்வரட்டுப்பள்ளம்அணையை ஒட்டி பின்னாலுள்ள மலைத் தொடரில் சுமார் எண்ணூறு அடி உயரத்தில் மணியாச்சி ஆறு ஓடுகிறது என்றார். ஆனால் இப்பிரச்னை பற்றி மாவட்ட கலெக்டரிடம் பேசும் பொழுது அணைக்கட்டு பின்னாலுள்ள மலையில் சுமார் எண்பதடி உயரத்தில் ஓடும் மணியாச்சி ஆறு என்கிறார். எண்ணூறு அடி என்பதே சரி.

சக்தி நகர். பீ. சுப்பிரமணியன்.

* ஓசைப்பட்டி ஹரிஜன காலனி பற்றிய செய்தியில் — அது பவானித் தொகுதி என்று குறிப்பிட்டுள்ளது தவறு. அது அந்தியூர் ரிசர்வ் தொகுதி. அதன் எம். எல். ஏ.தான் மாதையன்.

கவுந்தப்பாடி. அன்புதாசன்.

* பெரியார் மாவட்ட கலெக்டருடன் தாங்கள் நடத்திய பேட்டியில் அவர், "2472 அடிகுழாய்களில் இரண்டே இரண்டு சதவீதம்தான் ரிப்பேரில் உள்ளது" என்று கூறியுள்ளார். அவர் கணக்குப் படியே இரண்டு சதவீதம் என்றால் கூட 49 குழாய்கள் ரிப்பேரில் உள்ளன. ஒரு கிராமத்திற்குப் போடுவதோ அநேகமாய் ஒரே குழாய்தான். அப்படியென்றால் 49 கிராமங்களின் கதி என்ன என்பதைக் கலெக்டர் நினைத்துப் பார்க்க வேண்டும்.

அரசமரப்பேட்டை. கே. பாலாஜி.

* "குறைகளை மக்கள்தான் சொல்லணும். அதற்குத்தானே மனுநீதி நாள்னு ஒதுக்கியிருக்கோம்" என்று கலெக்டர் பேசறாருங்க. ஆனா கல்கி பத்திரிகைக்கே, கலெக்டர் சரியான பதில் குடுக்கலீங்களே; எங்களைப் போல் ஏழை பாழைங்களுக்கு எப்படிங்க பதில் குடுப்பாரு? பரிகாரஞ்செய்வாரு? பதவிக்கு வந்ததும் மக்களை மறக்குற அரசியல்வாதிங்க போல அதிகாரிங்களும் மாறிட்டா ஜனங்களுக்கு விமோசனம் உண்டுங்களா?

தா. நா. பாளையம். முல்லை மணாளன்.

* அனல் பறக்கும் விஷயங்களாய் கல்கி முழுவதும் வழிந்துகொண்டிருக்கும்போது...'வஞ்சம்' நாடகத் தொடர் ஒரு பெருமூச்சை விட வைத்தது!

பெங்களூர்—16. டால்ரிக்ஸ்.

* என்னைப் போன்ற பல கல்கி வாசகர்கள் படித்து, நல்ல மதிப்பெண்களுடன் பாஸ் செய்தும் நீண்ட நாட்களாய் வேலை கிடைக்காமல் இருக்கும் போது தாங்கள் 'சம்பள தினத்தன்று என்ன செய்வீர்கள்?' என்று போட்டி வைத்திருப்பது வயிற்றெரிச்சலாக இருக்கிறது.

கொப்பம்பட்டி. செ. அன்பு மதியழகன்.

* அருமையான தலையங்கம். அப்படியே 'பிட்' நோட்டீஸ் அடித்து, எல்லாப் பல்லவன் மற்றும் பட்டுக்கோட்டை அழகிரி வண்டிகளில் ஒட்டணும் சாமி!

ஈரோடு — 1. விஜயா முரளி.

* நான்கு படங்களுக்கு "நறுக்கென்று" நியாயமான முறையில் விமர்சனம் எழுதியுள்ளீரே!

பெங்களூர்—21. ப. மூர்த்தி.

* தக்க தருணத்தில் தன் பெண்ணுக்குத் திருமணம் செய்து வைக்க முடியாமல், கூடி வந்த தருணமும் தடைபட்டதால் வாடிநின்ற ஒரு தந்தையின் உள்ளத்து உணர்வுகளைப் படம் பிடித்துக் காட்டி (அநாமதேயத்தடைகள்!) கண்களில் நீரைச் சுரக்கச் செய்து விட்டார் சுப்ர. பாலன்!

மதுரை—1. பி. எல். பரமசிவம்.

கடற்கரையோரம்
கட்டு மரத்தின் அணிவகுப்பு;
விழிக்கரையோரம்
காதல் மனத்தின் நெட்டுயிர்ப்பு!

எதிர்ப்பக்க வண்ணப்படம்: **யோகா**

ரூ 10 பரிசு பெறுபவர்:
அ. கயல்விழி,
பே/பா. எஸ். அக்னி,
கடலூர் ரோடு,
விருத்தாசலம்—1.

# அ.தி.மு.க.வில் இப்போது என்ன நடக்கிறது?

* ப. மூர்த்தி, பெங்களூர்.

? கலைஞர் தமிழக மேல்சபையின் எதிர்க்கட்சித் தலைவரானது பற்றி உமது கருத்து?

! சரியான சமயத்தில்தான் மேல் சபையில் எதிர்க்கட்சித் தலைவராகியிருக்கிறார். அவை உறுப்பினர்களை ஆட்சியில் உள்ளோரும் அதிகாரிகளும் எப்படியெப்படியெல்லாம் முட்டாள்களாக்கப் பார்க்கிறார்கள் என்பதை அவர் தோலுரித்துக் காட்டிய பேச்சு அருமை. ஆம்; தெரு விளக்குகள் போடுதல், பொதுக் கழிப்பிடங்கள் கட்டுதல் போன்ற குறிப்புக்களில் போன வருடம் என்ன வார்த்தைகள், எந்தத் தெருக்களின் பெயர்கள் இடம் பெற்றிருந்தனவோ அவையேதான் அச்சாக இந்த ஆண்டு கொடுக்கப்பட்ட குறிப்புக்களிலும் இருக்கின்றன என்பதை இரண்டாண்டுக் குறிப்புகளையும் வைத்துக் கொண்டு அவர் நகராட்சி — மாநகராட்சி மானியக் கோரிக்கை மீது மேல் சபையில் ஒப்புநோக்கிப் பேசிய பேச்சு ஆட்சிக்கு ஒரு சரியான சூடு.

* கா. சேட்டு முகம்மது, விருத்தாசலம்

? சமீபத்தில் தங்கள் பாராட்டுக்குள்ளானவர் யார்?

! சுஹாசினி போன்ற நிஜமாகவே தகுதியானவர்களைத் தேர்ந்தெடுத்து இந்த ஆண்டு தேசிய விருது கொடுத்திருக்கும் மத்திய அரசுதான்.

* கே. ராஜலட்சுமி, குடியாத்தம்

? 'ராஜ்ய சபை உறுப்பினர் பதவியால் எனக்குப் பெருமையல்ல; என்றால் வேண்டுமானால் அந்தப் பதவிக்குக் கௌரவம் ஏற்படலாம்' என்று சோ கூறியிருப்பது பற்றி?

! உண்மையாக இருந்தாலும், இதையே சோ சொல்லாமல் வேறு யாராவது சொல்லியிருந்தால் இன்னும் நன்றாயிருந்திருக்கும்.

* எஸ்.எஸ். மணி, திருவனந்தபுரம்

? எம்.ஜி. ஆரிடம் ஒரு பாராட்டைப் பெற கருணாநிதி என்ன செய்ய வேண்டும்? கருணாநிதியிடம் ஒரு பாராட்டைப் பெற எம்.ஜி. ஆர். என்ன செய்ய வேண்டும்?

! சந்தேகத்திற்கிடமின்றித் தாங்கள் அரசியலிலிருந்து விலகிவிட்டதாக இருவருமே அறிக்கை விட வேண்டும். வேறு எந்தச் செயலும் ஒருவரிடமிருந்து மற்றவருக்குப் பாராட்டுப் பெற்றுத் தராது!

* உமார்த்தி, கோவை

? 'பசி' ஷோபா — 'ஒரு மனிதன் ஒரு மனைவி' சுமித்ரா — யார் அதிகம் நெகிழ்வித்தவர்?

! 'உன் ஒவ்வோர் அசைவுக்கும் அர்த்தம் சொல்ல அகராதி ஆசைப்பட்டதே...' என்று யாரை நினைத்து வைரமுத்து எழுதினாரோ அவர்தான்!



* மத்திய.... * ...அரசின்...

* திருமதி அஞ்சலை மாரியப்பன், பிலாய் (ம.பி.)

? முன்பு தமிழகத்தில் நடந்து முடிந்த கூவம் சுத்திகரிப்பு, இப்போது மத்திய அரசு செய்து கொண்டிருக்கும் கங்கை சுத்திகரிப்பு — இரண்டையும் ஒப்பிடுங்கள்?

! முதலில் நடக்க வேண்டியது அரசியல் சுத்திகரிப்பு. அது நடந்த பிறகுதான் மற்ற சுத்திகரிப்புகள் சரியாக நடக்கும்.

* சு. தாணுமாலயப் பெருமான்; இடலாக்குடி.

? அ.தி.மு.க.வில் இப்போது என்ன நடக்கிறது?

! மிச்சம் மீதி இருப்பதையெல்லாம் பங்கு போட்டுக் கொள்ளும் வேலை. எஸ். டி. எஸ்.ஸின் லஞ்ச ஊழல் குற்றச்சாட்டுக்களை மடியில் வைத்துக் கொண்டு ஆளுனர் புரட்டிப் பார்க்கிற படத்தை நாளிதழில் கண்டிருப்பீர்களே, அடேயப்பா என்ன கனம்! அத்தனை கனம் இல்லாவிட்டால் எம். ஜி. ஆர். மீது

ஊழல் புகார் கொடுக்க எம். எல். ஏ. ஹாஸ்டல் ஜன்னல் கண்ணாடிகள் உடையுமா? இது அநாகரிகத்தின் உச்ச கட்டம் மிஸ்டர் தாமரைக்கனி.

* அ. கயல்விழி, விருத்தாசலம் *

? மந்திரி பதவி என்பது அதற்குரிய தேர்வு எழுதி பாஸ் செய்தவர்களுக்குத்தான் என்று ஒரு சட்டத்தை இங்கு கொண்டு வந்தால்.....?

! அப்போதும் இப்போதுள்ளவர்கள்தான் வெற்றி பெறுவார்கள். மார்க்ஷீட் ஊழல் என்பதுதான் நம்மவர்களுக்கு லட்டு மாதிரியாயிற்றே!

* க. தாணுமாலய பெருமாள்,
இடலாக்குடி.

? ''தனியாரிடம் உள்ள கறுப்புப் பணத்தைப் பொது நன்மைக்காகச் செலவிடுவார்களானால் அதில் என்ன தவறு?'' என்ற அமைச்சர் அரங்கநாயகத்தின் கேள்விக்கு உங்கள் பதில் என்ன?

! இப்படியெல்லாம் பொறுப்பில் உள்ளவர்கள் பொறுப்பில்லாமல் பேசித்தான் நாட்டைக் கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். நேர்மையாகச் சம்பாதித்து உபரியாக உள்ள பணத்தைத்தான் நற்பணிகளுக்குச் செலவிட வேண்டுமேதவிர கறுப்புப்பணத்தைச் சம்பாதித்து நல்ல காரியத்துக்குச் செலவிட்டாலும் கூட அது சட்டரீதியாகவும், தார்மீக ரீதியாகவும் குற்றமே. அமைச்சர்களின் இதுபோன்ற பேச்சுக்கள் அயோக்கியர்களுக்கு மேலும் துணிவு தரும்; நேர்மையாளர்களின் மனம் நோகச் செய்யும். போகிற போக்கைப் பார்த்தால், 'கறுப்புப் பணத்தைத்தானே லஞ்சமாகக்கொடுக்கிறார்கள்;வாங்குவதில்என்ன தவறு?' என்று கூட 'நியாயம்' பேசுவார்கள் போலிருக்கிறது!



* ...விருது... * ...பெறுபவர்கள்...

* போடி ரவிராஜ், ஊமச்சிகுளம்

? திருப்பதியில் இலவச மொட்டை திட்டம் எப்படி?

! அது சரி; தலையை விட்டுவிட்டுத் தங்குமிட வாடகையில் கைவைத்துவிட்டார்களே; தில்லாடிகள்!

* சூரிய நிலா, ஈரோடு

? பாடப் புத்தகங்களில் உள்ள பாடல்களை மனப்பாடம் செய்யத் தெரியாத மாணவர்கள் சினிமாப் பாடல்களைச் சுலபமாக மனப்பாடம் செய்து விடுகிறார்களே, எப்படி?

! அதுதான் இசைக்கு இருக்கிற ஆற்றல். தாவர ஜந்துக்கள் கூட இசையைக் கேட்டு குஷிப்பட்டு வளர முடியுமானால் மனிதர்களுக்கு — குறிப்பாக மாணவர்களுக்கு இசையுடன் கூடிய பாடல்கள் மகிழ்ச்சி அளித்து எளிதாக மனப்பாடமாகாதா என்ன?

* மனோபாரதி, பாண்டிச்சேரி

? குழந்தைகளின் குறும்பு, குமரிகளின் குறும்பு — எது புதுக் கவிதைக்கு ஒப்பானது?

! அது யார் எழுதிய எந்தப் புதுக் கவிதை என்பதைப் பொறுத்திருக்கிறது:

மதலையின் உடம்பில் மலரும்
இனிய மிருது புதுமை —
அது எங்கே இதுவரை ஒளிந்தது?
அன்னை இளங்குமரியாம், அப்போது
உள்ளத்தில் ஊடுருவிய இளம் காதல் —
அதன் மர்மம், இனிமை, புதுமை,
மிருதுத்தன்மை
இவையல்லவோ குழந்தையின் உடலில்
இன்று பூத்திருக்கின்றன!

என்றதாகூரின் கவிதைநீங்கள் குறிப்பிடும் இரு அம்சங்களுக்குமே ஒப்பானதுதான்!

* இரா. சுவாமிநாதன், சீர்காழி

? கோடை வெயிலைச் சமாளிக்க எந்த ஊருக்குப் போவதாக உத்தேசம்?

! எல். டி. ஸி. வசதி உள்ளவர்களைக் கேளுங்கள்!

* டி. விஜயகுமார், கொப்பம்பட்டி

? நெடுஞ்செழியன் எப்போது முதல்வராவார்?

! ஆளுனர் பதவிப் பிரமாணம் செய்து வைக்கும்போது!

* க. குமரேசன், திருவாரூர்

? சிறந்தது மருத்துவப் பணியா? ஆசிரியப் பணியா?

! சுயநலமில்லாமல், மனச்சாட்சியோடு செய்யப்படும் ஒவ்வொரு பணியும் சிறந்த பணிதான்.

நீங்கள் கேட்டவை — தராசு



* உண்மையே ஆளுவும்.... * ...போகிற போக்கு...



(காலே மணி 9.45. லஞ்ச் ரூமுக்குள் ரகுவீரும் சுசீலாவும் வெவ்வேறு திசைகளிலிருந்து வருகின்றனர். ரகுவீர் தோளிலிருந்து ஒரு சிறிய ஃப்ளாஸ்க் தொங்குகிறது. மௌனமாக இருவரும் அருகருகே மேஜையின் ஒரு மூலேயில் நாற்காலிகளில் அமர்கின்றனர். ரகுவீர் ஃப்ளாஸ்கைத் திறந்து மூடியில் காப்பி ஊற்றுகிருன்....)

ரகுவீர்: (காப்பிக்கோப்பையைச் சுசீலா முன் வைத்து): சாப்பிடு.

சுசீலா: நீங்க சாப்பிடுங்க.

ரகுவீர்: நீ கொஞ்சம் டேஸ்ட் பார்ரு. அப்புறம் நான் சாப்பிடறேன். நான் முதல்ல சாப்பிட்டா உனக்குப் பாக்கி ஒண்ணும் இருக்காது!

சுசீலா: (காப்பி அருந்தியவாறு) சர்க்கரை கொஞ்சம் கம்மியா இருக்கு.

ரகுவீர்: பரவாயில்லே, நீதான் ஸ்வீட் கேர்ள் ஆச்சே, உன்னைத் தொட்டுக்கறேன்.

சுசீலா: எத்தனே நாளேக்கு....?

ரகு: காலமெல்லாம்!

சுசீ: அப்ப நம்ம காலம் சீக்கிரமே இறந்த காலமாயிடும்.

ரகு: டோண்ட் பி ஸில்லி!

சுசீ: நான் ஸில்லியாவே இருந்துட்டுப் போறேன். நீங்கதான் அறிவாளியாச்சே, என்ன பண்ணப் போறீங்க?

ரகு: லீவு போடப்போறேன், நீயும்போடப் போறே. இரண்டு பேரும் எல்.டி.ஸி.யைப் பயன்படுத்திக்கப் போறேம்.

சுசீ: அப்புறம்?

ரகு: ஆஃபீஸ்ல எல்லாரும் க்ரூப் எக்ஸ்கர்ஷன் போறதா வீட்டிலே சொல்லப் போறேம்.

சுசீ: பிறகு?

ரகு: ரிஜிஸ்தர் மேரேஜ் பண்ணிக்கப் போறேம்.

சுசீ: அழகுதான்!

ரகு: தெரியுமே....அறிவு, அழகு, இரண்டும் பொருந்தியிருப்பதால்தான் என்னே நீ லவ் பண்றே.

சுசீ: விளேயாடாதீங்க....

ரகு: விளேயாட்டா? விளேயாடறதுன்னு ஃபுல்லா தண்ணி போட்டுட்டு இரும்புக் கழியை எடுத்துக்கிட்டு வந்து உங்க வீட்டுக் கண்ணுடி ஜன்னல்களேயெல்லாம் உடைக்கணும்....

சுசீ: எங்க அப்பா கோபப்பட்டு வெளியே வந்தால் அரிவாளேக் காட்டுவீங்களாக்கும்... அந்த மாதிரி விளேயாட்டெல்லாம் எம்.எல்.ஏக்களுக்குத்தான் லாயக்கு, உங்களுக்கு இல்லே.

ரகு: கரெக்ட். அதனுலதான் சொல்றேன், நான் விளேயாடலே, ஐ ஆம் ஸீரியஸ்.

சுசீ: நிஜமாத்தான் சொல்றீங்களா?

ரகு: இதப் பாரு, நாம் நினைக்கிற காரியம் தப்பானதில்லே. ஒருவரை ஒருவர் நன்னு புரிஞ்சுக்கிட்டிருக்கோம். ஒருவரை, ஒருவர் மனப்பூர்வமா காதலிக்கிறோம். கல்யாணம் செய்துக்க நினைக்கிறோம். பெற்றோர் குறுக்கே நின்னு, நாம கையைப் பிசைஞ்சுக்கிட்டுத் தவிக்கிறதிலே என்ன பிரயோஜனம்? மேலே நடக்க வேண்டியதைக் கவனிப்போம்.

சுசீ: முஸ்லிம் பெண்கள் பாதுகாப்புச் சட்டம் கொண்டு வரத்துக்கு முன்னால், ராஜீவ் 'காதலர்கள் பாதுகாப்புச்' சட்டம் ஒன்று கொண்டு வரக்கூடாதா?

ரகு: அந்தச் சட்டம் ஏற்கெனவே இருக்கு, சுசீ! சட்டப்படி நாம கல்யாணம் செய்துக்க லாம். யாரும் தடுக்க முடியாது. நம் எதிர் காலத்தை நிர்ணயித்துக் கொள்கிற வயசும் அனுபவமும் தகுதியும் நமக்கு ஏற்பட்டு விட்டதா 'சட்டம் சொல்லுது. நீ என்ன சொல்றே....?

சுசீ: யோசிக்கிறேன்.

ரகு: ஹனிமூனுக்கு எந்த ஊருக்குப் போறதுன்னு?

சுசீ: இல்லே, பெற்றோர் விருப்பத்தை மீறி ரிஜிஸ்தர் கல்யாணம் செய்துக்க லாமான்னுதான்!

ரகு: சீக்கிரமா யோசி! தமிழக அரசு மாதிரி தாமதம் பண்ணாதே; மெத்தனம் காட்டாதே; ஃபைலே அடுக்காதே!

(ஃபிளாஸ்க்கை மூடி எடுத்துக்கொண்டு புறப்படுகிறான். சுசிலாவும் போகிறாள்.)

* * * * *

(பிற்பகல் மணி 12.45. பியூன் மாடசாமி ஒரு ஃபிளாஸ்குடனும் கூடைக்காரி நிர்மலா சாப்பாட்டுக் கூடையுடனும் வேறு வேறு திசைகளிலிருந்து வருகிறார் கள்.)

மாட: (ஃபிளாஸ்க்கை மேஜை மேல் வைத்துவிட்டு): என்ன அலேக்! இன்னிக் குச் சீக்கிரமே வந்துட்டே? வழியிலே போராட்டம், ஊர்வலம் ஒண்ணும் நடக்க லியா?

நிர்மலா: இருந்துச்சே!

(மாடசாமி உதவியுடன் கூடையை இறக்கு கிறாள்.)

மாட: இன்னிக்கு என்ன ஊர்வலம்?

நிர்மலா: அது என்னமோ அந்தகர் சங்க மாமே, எண்ணி எட்டுப் பேர் இருந்தாங்க. அவங்களைவிடப் போலீஸ்காரங்க அதிகம். மவுண்ட் ரோடிலேதான். ஆனா டிராஃபிக் பிளாக் ஆவலே.

மாட: எட்டுப் பேரு, பத்துப் பேருக்கு டிராஃபிக் எப்படி பிளாக் ஆவப் போவுது, பாவம்!

நிர்மலா: என்னாத்துக்குப் பரிதாபப்



2

படுறே?

மாட: அந்தகர்னு என்னு அர்த்தம் தெரியுமா?

நிர்மலா: நான் என்னத்தே கண்டேன்? பானர் பிடிச்சுக்கிட்டுப் போறாங்களா, அதைப் பக்கத்திலே பஸ்ஸில் குந்திக்கிட்டிருந்த ஒரு பள்ளிக்கூடப் பொண்ணு உரக்கப் படிச்சுது, கேட்டேன்.

மாட: அந்தகன்னு கண் பார்வை இல்லாதவன்னு அர்த்தம்!

நிர்: ஐயோ பாவம். அவங்க கூடவா போராட்டம் நடத்தணும்?

மாட: போராட்டம் நடத்தாம எந்தக் காரியம்தான் நடக்குது?

நிர்: சப்போர்ட்டே இல்லியே அவங்களுக்கு?

மாட: ஆதரவு இல்லியாவது? பணம் இல்லேன்னு சொல்லு! மற்றவங்களுக்கு மட்டும் என்ன ஆதரவு கிடைச்சு வாழுது? பணத்தை விட்டெறியறாங்க; லாரி லாரியா கோஷம் போட ஆளுங்க வந்து சேர்றாங்க. எல்லாம் காசு கொடுத்து வாங்குகிற சப்போர்ட் தானே. இவங்களும் பணத்தைக் கூழுற்றினா பார்வை நல்லா இருக்கிறவங்களே ஆயிரக் கணக்கிலே 'நாங்க குருடனுங்க' ன்னு சொல்லிக்கிட்டு வருவாங்க. எல்லாமே குருட்டுத்தனமான ஆதரவுதான், அலேக்கு...! அது சரி, அந்தகன்னு என்ன அர்த்தம்னு நான் உனக்குச் சொன்னேனில்ல. அலேக்னு என்ன அர்த்தம்னு இப்ப நீ எனக்குச் சொல்லு....!

நிர்: (வெற்றிலைப் பையைத் திறந்து கொண்டே): அதுவா.... சொல்றேன். கேட்டுக்க..... நான் பொறந்து கொஞ்ச நாளைக்கு எனக்குப் பேரே வைக்கலே....

மாட: ஏன்?

நிர்: தலைவரு வருவாரு; குழந்தையை வாங்கிக்குவாரு. பெயர் சூட்டுவாருன்னு எங்க நயினா சொல்லிடுச்சு....

மாட: சரிதான். அப்பால...?

நிர்: என் ஆத்தா என்னை அநாமதேயம்! கண்ணே! அநாமதேயம்!ன்னு நைனாவைக் கிண்டல் செய்யறதுக்காகவே கூப்பிடும்! தலைவரு எப்ப வராரு? என் ராசாத்திக்கு எப்ப பேரு வைப்பாரு?ன்னு என்னைக் கொஞ்சுவது போலக் கேட்டு நயினாவுக்கு வெறுப்பேத்தும்!

மாட: வீட்டுக்குள்ளேயும் அரசியல் பூந்து விளையாடிச்சுன்னு சொல்றே!

நிர்: அரசியலும் சினிமாவும் பூந்து புறப்படாத விடு எது? அந்தச் சமயத்துலே அலேக் நிர்மலான்னு ஒரு ஷ்டாரு..

மாட்: ஓ! எலந்தப் பழமா....

நிர்: ஆ! தெரிஞ்சிருக்கே... ஆம்பிள்ளேங்க எல்லாம் ஒரே ஸெட்டுத்தான்யா!

மாட: அலேக் நிர்மலாவைத் தெரியாமப் போவுமா?

# ஜலதோஷம் பிடித்தால் சந்தோஷம்!



கும்பகோணத்திலிருந்து ஒரு கி. மீ. தொலைவில் உள்ள ராம் நகருக்குள் நாங்கள் நுழைந்தபோது மூக்கைப் பிடித்துக் கொண்டுதான் நுழைந்தோம். காரணம், ராம்நகர் வீடுகளுக்குப் பின்னாலேயே கும்பகோணம் நகராட்சியின் உரக்கிடங்கு — அதாவது குப்பை கொட்டும் இடம் இருப்பதால், நகராட்சியினர் குப்பைகளோடு மலத்தையும், செத்துப் போன நாய், பூனை போன்ற பிராணிகளையும் கொண்டு வந்து போடுவதுதான்!

சுமார் ஒரு மணி நேரம் இருந்த எங்களுக்கே இப்படியென்றால் அங்கேயே வசித்துக் கொண்டிருக்கும் சுமார் முப்பது குடும்பங்களுக்கும் எப்படி? அதையேன் கேட்கிறீர்கள்? எல்லோரும் ஜலதோஷம் பிடித்தால் சிரமப்படுவார்கள். ஆனால், நாங்கள் சந்தோஷப்படுவோம். அப்போதாவது இந்தத் துர்நாற்றத்திலிருந்து தப்பிக்கலாம் அல்லவா! இத்தனைக்கும் எங்கள் ராம்நகர் கும்பகோணம் நகராட்சியால் அங்கீகரிக்கப்பட்ட இடம். நகராட்சியின் உரக்கிடங்கை மாற்றுவதற்கு மாற்று இடமும் தருவதாக இந்நகரை எங்களுக்கு வீட்டு மனைகளாக விற்றவர் சொல்லிப் பார்த்து விட்டார். அப்படியும் நகராட்சி மாற்றுவதாக இல்லை. விதியே என்றுதான் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்'' என்றார்கள் ராம்நகர் மக்கள் நல மன்றத்தின் தலைவர் வெங்கட்ராமய்யரும் மற்றவர்களும்!

— நமது நிருபர்.



* தரிசாகக் கிடக்கும் ஹரிஜனக் காலனி.



* பழனிச்சாமி

# 32 ஆண்டுகளாக...

இரண்டு வாரங்களுக்கு முன்பு கூட ஆதி திராவிடர் நலத்துறை அமைச்சர் அருணாசலம் பத்து லட்சம் ஆதிதிராவிடர்கள் பொருளாதார மேம்பாட்டையும் திட்டம் ஒன்றை அரசு தீட்டியிருப்பதாக அறிவித்தார். ஒருவேளை திட்டம் அறிவிப்பதில் என்ன கஷ்டம், நிறைவேற்றுவது பற்றி அப்புறம் பார்த்துக் கொள்ளலாம் என்ற தைரியத்தில்தான் அவர் அப்படிப் பேசினாரோ என்னவோ! இல்லையென்றால் திருவையாறுக்கு அருகிலுள்ள மருவூர் என்ற ஊரில் ஹரிஜனக் குடியிருப்புக்காக 1954 ல் ஒதுக்கப்பட்ட இரண்டு ஏக்கர் நன்செய் நிலம் 32 ஆண்டுகளாக அப்படியே தரிசாகக் கிடக்க முடியுமா? பழனிச்சாமி என்ற அந்த ஊர் ஹரிஜன இளைஞரைச் சந்தித்த போது, ''எங்க ஊர் எம். எல். ஏ. விடம் சொல்லிச் சொல்லி அலுத்துப் போச்சுங்க...'' என்று ரொம்பவும் மனமுடைந்து சொன்னார்.

— நமது நிருபர்.

*நிர்:* அதும் பேரிலே நயினாவுக்கு ஒரு இது!

*மாட:* 'இது'!

*நிர்:* ஆமா. ஆனா அதைக் காட்டிக்காம எனக்கு நிர்மலான்னு பேர் வைக்கத் தீர்மானிச்சுட்டதாச் சொன்னாரு. ஆனா ஆத்தாளுக்குப்புரிஞ்சுபோச்சு. அது அநாமதேயம்னு என்னைக்கூப்பிடறதை விட்டுட்டு அலேக்கு! அடியே அலேக்கு! ன்னு கூப்பிட ஆரம்பிச்சுது!

*மாட:* நயினாவைக் கிண்டல் பண்றதுக்காக....

*நிர்:* ஆமா! கடைசிலே அந்தப் பேரே நிலேச்சுப் போச்சு. இப்பவும் நிர்மலான்னு கூப்பிடறவங்களை விட அலேக்னு என்னைக் கூப்பிடறவங்கதான் ஜாஸ்தி.

*மாட:* பொருத்தமான பேருதான். சீதையை ராவணன் தூக்கிட்டுப் போன மாதிரி உன்னையும் அலேக்காத் தூக்கிட்டுப் போயிடலாம் போலத்தான் தோணுது!

*நிர்:* தோணும் தோணும்! நீ அலேக்காத் தூக்கிட்டுப் போற வரைக்கும் என் கை பூப் பறிச்சிட்டிருக்குமா? சீதை சாது. அழுதுகினே போச்சு. நான் தாடகையா மாறிடுவேன் ஜாக்கிரதை!

(டிபன் பாக்ஸுடன் ராகவாச்சாரி வருகிறார்.)

*ராகவா:* என்ன கலாட்டா இங்கே? தாடகை, சூர்ப்பனகைன்னு என்ன டிஸ்கஷன்? சாப்பாட்டுக் கூடையைக் கொண்டு வந்து இறக்கியாச்சுல்ல? அப்புறம் என்ன அரட்டை? வெளியே போய்க் காத்திருக்க வேண்டியதுதானே?

*நிர்:* எனக்கு என்ன சாமி, வந்துச்சு? நான் போறேன். பாண்டியன் ஸாரு, சிவராமன் ஸாரு, ஆனந்த் ஸாரு எல்லாரும்தான் எந்த டிபன் கேரியரு யாருதுன்னு எங்களுக்குத் தடுமாறிப் போவும். நீயே உன் கையாலேயே எடுத்துப் பிரிச்சுக் கொடுத்துடுன்னு சொன்னாங்க. அதுக்காவத்தான் காத்திருக்கேன். வேணும்னா வெளியே போறேன்.

*பாண்டியன் (வந்தவாறு):* நோ! நோ! போயிடாதே! தப்பித் தவறி ஆனந்தோட என்.வி. காரியரை நான் திறந்துட்டா சோறே வேண்டியிருக்காது. நீயே, உன் கையாலேயே என் காரியரை எடுத்துக் கொடுத்துடு!

*ராகவா:* பேஷ்! நீங்க செய்த ஏற்பாடு தானா இது? அவனவன் டிபன் கேரியர் அவனவனுக்குத் தெரியாதா? கில்லாடிங்கதான்! இன்னிக்கு டிபன் காரியரைப் பிரிச்சுத் தரச் சொல்லுவீங்க! நாளைக்கு உரிச்சுத் தரச் சொல்லுவீங்க! பஞ்ச் ஆஃப் ரோக்ஸ்!

*'ஆனந்த்:* (சிகரெட் புகைத்தபடி' வந்தவாறே): நீங்க ஏன் ஸார் இந்த விஷயத்தில் அனாவசியமா தலையிடறீங்க? நாங்கப்பாட்டுக்கு எங்க காரியத்தைக் கவனிச்சுக்கிட்டுப் போறோம், மைதிலி விஷயத்திலா உங்களோட போட்டிக்கு வரோம்?

*ராகவா:* மானர்லெஸ் புரூட்! எங்களோட ப்ளடானிக் ஃப்ரெண்ட்ஷிப் பற்றி உனக்கு என்னடா தெரியும்?

*சிவராமன் (உள்ளே நுழைந்து):* அந்த வார்த்தைக்கு உங்களுக்கு அர்த்தமே தெரியலேன்னு தெரியும்!

*ராகவா:* ஆமாண்டா, ஆங்கில அகராதி தயாரிச்ச டாக்டர் ஜான்ஸனே உங்கிட்ட வந்து



"கோடை விடுமுறையைக் கழிக்க, கொடைக்கானல் போறதா... ஊட்டிக்குப் போறதான்னு எனக்கும் என் மனைவிக்கும் பெரிய சர்ச்சை உருவாகி, பயங்கரச் சண்டையாயிடுச்சு!"

"அப்புறம் எங்கேதான் போனீங்க?"

"அவ கோர்ட்டுக்குப் போனாள்! நான் ஜெயிலுக்குப் போனேன்!"

— ஜெயபாரதிப்ரியா.

தானே பாடம் படிச்சான்! ஏண்டா? எனக்கு மரியாதை தராட்டாலும் என் வயசுக்கு, என் பொஸிஷனுக்கு மதிப்புத் தர வேண்டாம்?

பாண்டியன்: அதுனாலதான் ஸார் இந்த மட்டோடு நிறுத்திக்கிறோம். இல்லேன்னா...

ராகவா: இல்லேன்னா....?

பாண்டியன்: லஞ்ச ஊழல் புகாரோடு இன்டீஸன்ட் பிகேவியர் புகாரையும் டைரக்டர்ஸ்மீட்டிங்லடிஸ்கஸ்பண்ணியிருப்பாங்க!

ராகவா: யூ ரோக்! யாருடா லஞ்ச ஊழல் காரன்? நானா? யாருடா இன்டீஸண்டா, பிகேவ் பண்றது? நானா?(கையை ஓங்குகிறார். மைதிலி பரபரப்புடன் வருகிறாள்.)

மைதிலி (அவர் கரத்தைப் பற்றி): ஸார்! ஸார்! காம் யுவர்ஸெல்ஃப்! என்ன இது?

ராகவா: பஞ்சாப் பொற்கோயில்லே பர்னலா எடுத்த நடவடிக்கை மாதிரி இந்தப் பசங்களையும் இந்தக் கம்பெனியிலேருந்து ஃப்ளஷ் அவுட் பண்ணணும்-அப்பத்தான் இந்த நிறுவனம் உருப்படும்!

மைதிலி: இதெல்லாம் ஜெனரேஷன் காப்னாலே வரது ஸார்! உங்களை இளைஞர்களாலே புரிஞ்சிக்க முடியலே. இளைஞர்களை உங்களாலே புரிஞ்சுக்க முடியலே, அவ்வளவுதான்.

(டிபன் பாக்ஸுடன் சாம்பசிவம் வருகிறார்.)

சாம்பசிவம் (டிபன் பாக்ஸைத் திறந்தவாறே): கவர்னர் பதவியை ஒழிச்சுக் கட்டணும்னு சொல்ற மாதிரி மானேஜிங் டைரக்டர் பதவியையே ஒழிச்சுக் கட்டணும்!

ரகுவீர்: ஆமா, தலைவலி அவனவனுக்கு வந்தாத்தான் தெரியுது! இத்தனை காலமா எம்.டி. பேரைச் சொல்லிச் சொல்லியே எங்களை விரட்டிக்கிட்டு இருந்தீங்க.... இப்ப எம்.டி.யே வேணும்கிறீங்க!

சாம்ப: எம்.டி. என்னத்தைக் கிழிக்கிறார்? எல்லாம் நம்ப ஜி. எம். ராகவாச்சாரி ஸார் காட்டற இடத்தில் கையெழுத்துப் போடற வேலைதானே? அதை ஜி. எம்.மே செய்துக் கிட்டாப் போச்சு! எம்.டி. என்ன எம்.டி.?

ரகுவீர்: அப்படியேஎம்.டி.பதவி அவசியம் தேவைன்னா ஜி. எம். சொல்றபடிதான் கேட்கணும்; இவர் முன் கைகட்டி நிற்கணும்னு சட்டம் கொண்டு வரணும்!

சாம்ப: கரெக்ட்! இப்ப பாரு! இந்த இன்ஸல்ட்டைத் தாங்க முடியாம நான் ரிஸைன் பண்ணிடுவேன். என் எக்ஸ்பீரியன்ஸுக்கு என்னை வேறே எத்தனையோ கம்பெனியிலே வெற்றிலே பாக்கு வைச்சு அழைச்சுப் பதவி கொடுத்து வைச்சுப்பான். ஆனா இந்தச் சமயத்துல ரிசைன் பண்ணினா, 'லஞ்ச ஊழல் குற்றச்சாட்டுக்குப் பயந்து ராஜினாமாப் பண்ணிட்டான்'னு பேர் நிலைச்சுடும். அதுக்காகத்தான் பயப்படறேன்!

(முத்து வருகிறான்.)

முத்து (வந்து அமர்ந்தவாறே): ஏதாவது டிரான்ஸ்ஃபர், இலாகா மாற்றம்னு செய்தாலும் அதைச் சாக்கிட்டுக்கிட்டுக் 'கிருஷ்ணா'ன்னு நீங்க ரிஸைன் பண்ணிடலாம். அதுக்கும் வழியில்லே!

ராகவா: எதிர் கட்சித் தலைவரே, அப்புறம் புது நியூஸ் ஏதாவது உண்டா?

முத்து: யார் கண்டாங்க. அவனவனும் திருடனுக்குத் தேள் கொட்டின மாதிரி கம்முன்னு உக்காந்திருக்கான்.

சாம்ப: டைரக்டர்ஸ் மீட்டிங் மினிட்ஸை யார் டைப் பண்றது? சுசீதானே?

சுசீ: அந்தப் பாக்கியம் எனக்கு இல்லே ஸார். எம்.டி.யே உக்காந்து டைப் பண்றார்.

மைதிலி: டொக்கு.... டொக்கு.... டொக்குன்னு ஒவ்வொரு எழுத்தா அவர் கான்பிடென்ஷியல் ரிப்போர்ட் தயாரிச்சு முடிக்கிறதுக்குள்ளே, ராபின் மெய்ன் கேஸ்ல கூட ஒரு முடிவு தெரிஞ்சு போயிடும்!

ஆனந்த்: ஸஸ்பென்ஸ்லே வைச்சுக்கொல்றாங்களே!

முத்து: நமக்குத்தான் ஸஸ்பென்ஸ். நிஜமாகவே ஊழல் பண்ணியிருக்கிறவனுக்கு என்ன ஸஸ்பென்ஸ்? எப்படியும் வெளியே அனுப்பப் போறாங்கன்ற எண்ணத்துலே பாக்கி இருக்கிற நாளில் அகப்பட்டதைச் சுருட்டுன்னு தொடர்ந்து காரியம் பண்ணிக் கிட்டிருப்பான்.

(மாடசாமி பரபரப்புடன் வருகிறான்.)

மாட: ஸார்! ஸார்! எம்.டி. வந்துக்கிட்டு இருக்கார் ஸார்! எம்.டி.! கையிலே ஒரு கத்தை கடிதாக இருக்கு!

அனைவரும்: என்ன! என்ன!! என்ன!!!

(எம்.டி. பிரகாஷ் நுழைகிறார். அவர் கையில் உள்ள உறைகளை அனைவரும் 'டிஸ்மிஸ் ஆர்டர்களா? ஷோ காஸ் நோட்டீஸ்களா?' என்று கலவரத்துடன் பார்க்கிறார்கள்.)

(திரை)

(தொடரும்)



* தமிழ்நாட்டில் 321 கி. மீ. ஓடும் காவிரி.

# காவிரி நீர்: தட்டிக் கேட்போம்; கெஞ்ச வேண்டாம்!

கர்நாடக மாநிலத்தில் கூர்க் மாவட்டத்தில் மேற்குத் தொடர்ச்சி மலைப் பகுதியில் தலைக்காவிரி உற்பத்தியாகிக் கடலில் சங்கமிக்கும் வரை 804 கி. மீ. பயணப்படுகிறது. இதில் தமிழ்நாட்டில் 321 கி. மீ. தமிழகத்தில் காவிரிப் பாசனத்தில் விவசாயம் என்பது மிகப் பழைய சரித்திரம். 1700 ஆண்டுகளுக்கு முன்பே கரிகால் சோழன் காலத்தில் கட்டப்பட்டது கல்லணை. பலப்பல கால்வாய்களையும் வெட்டி ஏராளமான நிலப்பரப்பைச் சாகுபடிக்குக் கொண்டு வந்தனர் சோழ மன்னர்கள். தமிழகத்தில் பதினைந்து லட்சம் ஏக்கர் நிலப்பரப்பு காவிரி நீரால் பாசனம் பெறுகிறது என்றால் கர்நாடகத்திலோ 19ம் நூற்றாண்டின் இறுதி வரை காவிரியால் பயிரானது 87,131 ஏக்கர் தான்! ஏன் 1970 ல் கூட 2,35,000 ஏக்கர் தான் கர்நாடகத்தில் காவிரி நீரால் பாசனம் பெற்றது. எனவே அனுபவ பாத்தியதை என்று பார்த்தால் தமிழகத்துக்கு உள்ள அளவு கர்நாடகத்துக்கு இல்லவே இல்லை. இதற்கு மறுபக்கமும் உண்டு. கர்நாடகம் என்ன சொல்லுகிறது?

'கர்நாடகத்தில் காவிரி மலைப்பாங்கான பகுதிகளில் ஓடியதால் அதை விவசாயத்துக்குப் பயன்படுத்த அதிக முயற்சி எடுக்கப்படவில்லை' என்பது ஒன்று. இரண்டாவதாக, 'அன்றைய மைசூர், சமஸ்தானமாக, பிரிட்டிஷ் மேலாதிக்கத்துக்கு உட்பட்டு இருந்தது. ஆனால் சென்னை ராஜதானியோ பிரிட்டிஷாரின் நேரடியான ஆட்சிக்குக் கீழ் இருந்தது. எனவே, இந்த இரு

காரணங்களாலும் காவிரி நீர், கர்நாடக மாநிலத்தின் நலனுக்கு எதிராகத் தமிழகத்தின் நலனுக்கே அதிகமாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த அநீதிக்கு இன்றேனும் மாற்று காண வேண்டும்' என்கிறது.

நிகர விளைவு என்னவென்றால் கர்நாடக மாநிலம், ஏற்கெனவே உள்ள ஒப்பந்தங்களைக் காற்றில் பறக்க விட்டுவிட்டுப் புதிய அணைகளைக் கட்டிக் கொண்டே போக, தமிழகத்துக்கு காவிரிநீர் கிடைப்பதில்லை. திருச்சி, தஞ்சை மாவட்டங்கள் வறண்ட பூமியாகி விடலாம் என்ற கவலை தோன்றியுள்ளது. 'மனிதாபிமான அடிப்படையிலாவது காவிரியில் தண்ணீர் விடுங்கள்' என்று அவ்வப்போதும் நாம் கர்நாடக மாநிலத்திடம் கெஞ்ச வேண்டிய நிலை!



* கர்நாடகத்தை நம்பியிருக்கும் மேட்டூர் அணை.

காவிரி நீர்ப் பிரச்னையில் கர்நாடகத்துக்கும் தமிழ்நாட்டுக்கும் இடையில் இரண்டு முக்கியமான ஒப்பந்தங்கள் உள்ளன. 1892 ஆம் ஆண்டு ஒப்பந்தத்தின் ஷரத்துக்களை ஆராயும்போது ஒரு விஷயம் மிகத் தெளிவாகத் தெரிகிறது. அதாவது தமிழ்நாட்டில் ஏற்கெனவே பாசனத்தில் இருந்து வரும் நிலங்களின் நலன்கள் பாதிக்கப்படும் வகையில் கர்நாடகம் (மைசூர்) எந்த ஒரு அணையையோ நீர்த்தேக்கத்தையோ புதிதாக அமைக்கக் கூடாது என்பதுதான்.

1924 ல் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. அந்த ஒப்பந்தம் ஏற்படக் காரணமே கிருஷ்ணராஜ சாகர் அணையை மைசூர் கட்டுவதைச் சென்னை ஆட்சேபித்ததுதான்! இந்த ஆட்சேபணை 1892 ஆம் ஆண்டு ஒப்பந்தத்தின் அடிப்படையில் எழுப்பப்பட்டது. ஆட்சேபணைக்குப் பிறகு ஏற்பட்ட ஒப்பந்தம், மேட்டூர் அணையும் நீர்த்தேக்கமும் உருவாக வழி வகுத்தது. கிருஷ்ணராஜ சாகரிலிருந்து குறிப்பிட்ட அளவில் நீர் அவ்வப்போது தமிழகத்துக்குத் திறந்து விடப்பட உறுதி கூறியது. மைசூரில் சாகுபடியாகும் நிலத்தை அதிகரிக்க அனுமதி தந்தது. தமிழ்நாடு பவானி, அமராவதி, நொய்யல் நதிகளில் அணைகள் கட்டினால் கர்நாடகமும் சில அணைகளைக் கட்டலாம் என்று அனுமதி அளித்தது. அதேநேரத்தில் 1892 ஆம் ஆண்டு ஒப்பந்தத்தை மதிக்க வேண்டும் என்றும் தமிழகம் ஏற்கெனவே பெற்று வரும் தண்ணீரின் அளவு குறையவே கூடாது என்றும் அழுத்தமாகக் கூறியது.

இவ்வாறு தமிழகத்துக்குச் சாதகமாக மட்டுமின்றிப் பாதகமாகவும் சில அம்சங்களைக் கொண்டு உருவான இந்த ஒப்பந்தத்தில் மிக முக்கியமான ஒரு ஷரத்து இன்று நமக்குத் தலைவேதனை தந்து கொண்டிருக்கிறது. அந்த ஷரத்து என்னவெனில் —

ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு, அந்த ஆண்டுகளில் கிடைத்த அனுபவத்தின் அடிப்படையில் இந்த ஒப்பந்தத்தின் குறிப்பிட்ட சில ஷரத்துக்களில் மாறுதல்களைச் செய்து கொள்ளலாம். இன்னும் அதிகமான நிலத்தைப் பாசனத்துக்குக் கொண்டு வர முடியுமா என்பதை இரு அரசாங்கங்களும் பரிசீலனை செய்யலாம். பரிசீலனைக்குப் பிறகு பரஸ்பரம் பேசி அதுபற்றி ஒப்பந்தம் செய்து கொள்ளலாம்.

இந்த ஷரத்தின் அடிப்படையில்தான் கர்நாடகம், 1974 ல் ஒப்பந்தம் முடிந்து விட்டது என்றும் எனவே புதிய நீர்ப்பாசனத் திட்டங்களைக் கர்நாடகம் அமுல்படுத்தலாம் என்றும் அதற்குத் தடை ஏதும் கிடையாது என்றும் கூறிச் செயல்பட்டு வருகிறது. கர்நாடகத்தில் நீர்ப்பாசனத் திட்டங்கள் அதிகரிக்க அதிகரிக்கத் தமிழகத்துக்கு நீர் விடப்படுவது குறைந்து கொண்டே வருகிறது.

ஆனால் கர்நாடகத்தின் இந்த வாதம் அநீதியானது, சட்ட விரோதமானது என்பதற்குப் பல காரணங்கள் உள்ளன.

1924 ஆம் ஆண்டு ஒப்பந்தம் 50 ஆண்டுகளுக்குப் பிறகு பரஸ்பரம் பேச்சு வார்த்தை நடத்தி இரு தரப்பினரும் ஒப்புக் கொண்ட மாற்றங்களைத்தான் ஒப்பந்தத்தில் செய்ய வேண்டும் என்று கூறுகிறதேயொழிய கர்நாடகமோ, தமிழகமோ தன்னிச்சையாகச்

## அடுத்த இதழில்.....

### தஞ்சை மாவட்டத்தில் கல்கி — II



* தஞ்சையின் வறட்சிக்குத்
தமிழக அரசுதான் காரணம்!

— ஸ்பெஷல் ரிப்போர்ட்



* பளபளக்கும் பட்டும்
பரிதவிக்கும் நெசவாளர்களும்...

— கவர் ஸ்டோரி

* "எனக்குக் காரியங்கள்தான் முக்கியம்;
விளம்பரங்கள் அல்ல..."

— தஞ்சை கலெக்டர் கூறுகிறார்

செயல்பட அனுமதி தரவில்லை. மேலும் இரு தரப்பினரின் சம்மதத்துடன் ஒப்பந்தத்தில் மாற்றங்களைச் செய்து கொள்ளலாம் என்றுதான் கூறப்படுகிறதேயொழிய ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு ஒப்பந்தமே காலாவதியாகிவிட்டது என்று சொல்லப்படவில்லை. எனவே கர்நாடகம், தமிழகத்தின் ஒப்புதல் இன்றி 1,11,000 ஏக்கருக்கு அதிகமான நிலத்தைப் பாசனத்துக்குக் கொண்டு வரவே முடியாது; கூடாது!

இந்த ஒப்பந்தத்தின் பேரில் எப்போது சந்தேகம் அல்லது தகராறு நேர்ந்தாலும் இரு அரசாங்கங்களும் மத்தியஸ்தக் குழுவுக்கோ அல்லது மத்திய அரசுக்கோ தீர்வுக்கு விடவேண்டும் என்று ஒரு ஷரத்து கூறுகிறது. அந்த ஷரத்தில் ஐம்பதாண்டு காலக்கெடு குறிப்பிடப்படவில்லை. 'எப்போது நேர்ந்தாலும்' என்றுதான் கூறப்படுகிறது. இது. இந்த ஒப்பந்தம் நிரந்தரமாக இரு தரப்பினரையும் கட்டுப்படுத்தும் என்பதற்கு மற்றுமொரு அத்தாட்சி.

ஆனாலும் கர்நாடகம் கண்ணை மூடிக் கொண்டு 1974ல் ஒப்பந்தம் காலாவதியாகிவிட்டது என்று கூறிக்கொண்டு தன்னிச்சையாகச் செயல்பட்டு வருகிறது!

1892 ஆம் ஆண்டின் ஒப்பந்தப்படியும் சரி, 1924 ஆம் ஆண்டின் ஒப்பந்தப்படியும் சரி, தமிழ்நாட்டுக்கு ஏற்கெனவே தரப்பட்டு வருகிற நீரை இல்லை என்று கூற கர்நாடகத்துக்கு எந்தவிதமான உரிமையும் இன்றும் இல்லை; நாளையும் கிடையாது; எந்தக் காலத்திலும் இருக்க முடியாது!

அயல் நாடுகளில் அளிக்கப்பட்ட சில நீதிமன்றத் தீர்ப்புக்களைப் பார்த்தால் கூட ஏற்கெனவே அனுபவ பாத்தியதை உள்ளவர்களுக்குத் தண்ணீரின் அளவை மற்றொரு சாரார் குறுக்கிட்டுக் குறைக்கவே முடியாது. அமெரிக்க சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு இதில் மிகத் தெளிவாக இருக்கிறது.

எனவே தமிழகம் சட்டபூர்வமாகப் பார்க்கும்போது மிகவும் பலமான நிலையில் உள்ளது. துரதிர்ஷ்டம் என்னவென்றால் தமிழகத்தின் ஆட்சியில் உள்ளவர்கள், இருந்தவர்கள் அரசியல் காரணங்களால் பலவீனப்பட்டுப் போய் மத்திய அரசுக்கு விட்டுக் கொடுத்து வந்திருப்பதுதான்.

1956ல் பிறப்பிக்கப்பட்ட ஒரு சட்டப்படி, பேச்சு வார்த்தைகளால் தீர்க்கப்பட முடியாது என்று மத்திய அரசு ஒரு நதி நீர் பங்கீட்டுப் பிரச்னையைக் கருதினால்தான் மத்தியஸ்தக் குழுவுக்குப் பிரச்னையை அனுப்பும்.

எனவே மத்தியஸ்தக் குழுவுக்குப் பிரச்னையை அனுப்ப மத்திய அரசு மனம் வைக்க வேண்டும், இல்லாவிட்டால் முடியாது! இந்த உரிமையைப் பயன்படுத்தித்தான் மத்திய அரசு, கருணாநிதி காலத்தில் சுப்ரீம் கோர்ட்டில் தமிழகம் தாக்கல் செய்த காவிரி நதி நீர்ப் பிரச்னை வழக்கை வாபஸ் பெறும்படி செய்து, பேச்சு வார்த்தைகளைத் தொடர

வைத்தது. இது மிகப் பெரிய துர்பாக்கியம். நீதிமன்றத்துக்குப் போயிருந்தால் நிச்சயம் தமிழகம் வென்றிருக்கும். மத்திய அரசு நம்மை நீதிமன்றத்துக்கும் போக அனுமதிக்கவில்லை; பிரச்னையை மத்தியஸ்தத்துக்கும்விடவில்லை. திரும்பத் திரும்பப் பேச்சு வார்த்தைகளை நடத்தச் சொல்கிறது. இதனால் ஒரு பலனும் விளையவில்லை. இதற்கிடையில் கர்நாடகமோ தன்னிச்சைப்படி புதிய நீர்ப்பாசன, அணைக்கட்டுத் திட்டங்களை நிறைவேற்றிக் கொண்டு போகிறது. தமிழகத்துக்குத் தண்ணீர் இல்லை என்று கைவிரிக்கிறது.

வெள்ளம் காவிரியில் கரைபுரண்டு ஓடும் என்ற அச்சம் தோன்றும் போதுதான் தமிழகத்துக்கு நீர் விடப்படுகிறது. உதாரணமாக, 38 ஆண்டுகளாக சராசரியில் 377 டி எம்ஸி நீர், மேட்டூருக்குக் கிடைத்து வந்தது. ஆனால் 76 — 77 ல் 135 டி எம்ஸி நீர்தான் கர்நாடகத்தால் அனுப்பப்பட்டு வந்து சேர்ந்தது. 82 — 83'ல் 173 டி எம்ஸி தான். இதனால் அந்த ஆண்டுகள் ஒவ்வொன்றிலும் ஏறத்தாழ ஒரு லட்சம் ஏக்கரில் விவசாயம் செய்ய முடியவில்லை. குறுவைச் சாகுபடி நடக்கவில்லை.

இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம் மத்திய அரசின் மெத்தனப் போக்கு. தன் கடமையைச் சரிவரச் செய்யாமல் அநீதிகள் நடப்பதைப் பார்த்துக் கொண்டிருக்கிறது. பலன் தராத பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டே இருப்பதில் கர்நாடகத்துக்குத் தான் ஆதாயம் என்பதைக் காண வேண்டுமென்றே மறுக்கிறது மத்திய அரசு. இரண்டாவது காரணம், தமிழக அரசு முதுகெலும்புள்ளதாகத் தோன்றவில்லை. அது துணிந்து தமிழக மக்களின் உரிமைகளுக்காகக் குரல் கொடுத்துத் தீவிரமாகப் போராட மறுக்கிறது. மத்திய அரசிடம் அச்சம் காரணமாகவோ, அல்லது பகைத்துக்கொள்ள விருப்பமில்லாததாலோ, அல்லது மத்திய அரசுடன் ஒத்துழைப்பதுதான் நம் கொள்கை என்ற எண்ணத்தினாலோ 'தமிழக அரசு ஏனோ தானோ என்று நடந்து கொள்கிறது. இப்படி தமிழக அரசு மத்திய அரசுக்கு முன் கைகட்டி நின்று சலாம் போட்டுக் கொண்டிருக்க, தஞ்சை, திருச்சி மாவட்டங்கள் வளம் கொழிக்கும் மாவட்டங்கள் என்ற நிலையிலிருந்து வறுமையும் வறட்சியும் மிக்க மாவட்டங்களாக மாறி வருகின்றன.

**சென்னைப் பல்கலைக் கழகத்தின் அரசியல் சட்டத்துறைத் தலைவர் பேராசிரியர் டி. எஸ். ராமராவ், அலகாபாத் பல்கலைக் கழகத்தில் நடந்த ஒரு கருத்தரங்கில் சமர்ப்பித்த ஆங்கிலக் கட்டுரையின் அடிப்படையில் தமிழில் எழுதப்பட்டது.**

## பிரதமர் பாராட்டிய இசை

பழைய கால மண் பானை மாதிரி அகன்ற பஞ்சலோகப் பாத்திரம். மேலே ஒரு 'வாய்' இல்லாமல் நாலைந்து வாய்கள். அதை மான் தோல்கள் அடைத்திருக்கின்றன. 'தட்' டென்று ஒரு தட்டு தட்டினாலும் — ஒவ்வொன்றிலிருந்தும் வித்தியாசமான சப்தம் 'கம்' மென்று பானை அதிர எழும்புகிறது. வாத்தியத்தின் பெயர் 'பஞ்சமுக வாத்தியம்' இக்கால 'ட்ரிபின் பேங்கோ'வை கொஞ்சம் விஸ்தரித்த மாதிரி ஐந்து வாய்களோடு இந்த வாத்தியம். தமிழகத்தில் இருப்பது மூன்றுதானாம். அதையும்வாசிக்கத் தெரிந்த ஒரே ஒருவராய் இருப்பவர் — ஒடிசலான உடம்புக்காரரான சங்கரமூர்த்தி. 71 வயதுக்காரர்.

திருவாரூர்க் கோயிலில் உள்ள இந்த வாத்தியத்தில் 'ருத்ர தாண்டவத்தை' வாசிக்கிறார் சங்கரமூர்த்தி. யாரோ தாண்டவமாடுகிற மாதிரி உணர்வு எழும்ப வாசிக்கிறார். கேட்கக் கேட்க இனிமையாக இருக்கிறது. இதே மாதிரிதான் பிரதமருக்கும் இருந்திருக்க வேண்டும். 85 நவம்பரில் ராஜீவ்காந்தி, வெங்கட்ராமன் முன் வாசித்துக் காட்டின போது ஆச்சரியப்பட்டிருக்கிறார்கள். வெங்கட்ராமன் தமிழில் ''அட! நம்ம பக்கத்து ஆள்தானா?'' என்று வியப்புடன் விசாரித்திருக்கிறார். 2500 ரூபாய் கொடுத்து அனுப்பியிருக்கிறார்கள்

பிள்ளைகள் யாரும் அவ்வளவாக இந்த வாத்தியத்தைக் கற்றுக் கொள்ள முன் வரவில்லை. ''யாரும்முன்வந்தால்கற்றுக்கொடுப்பேன்'' என்கிறார் எலும்பு துருத்திய மார்போடு. பரம்பரையாய் வாசித்தும் ''மாசம் 165 ரூபாய்தான் கிடைக்குது. அதை வைச்சுத்தான் பிழைப்பு'' என்று சொல்லிவிட்டு 'சுத்த மத்தளம்' வாசித்துக் காண்பிக்கிறார். வாசிப்பு நன்றாகத்தானிருக்கிறது. வாசிப்பவர்கள் மட்டும்தான் பின்னால் அமுங்கினபடியே கிடக்கிறார்கள்.



# எத்தனை குட்டி போடும் தஞ்சை மாவட்டம்?

அன்று மாவட்டப் பிரச்னை ஒரு வழியாய் ஓய்ந்துபோய்விட்டது. இப்போது ஆரம்பித்திருப்பது தஞ்சாவூர் மாவட்டப் பிரச்னை. 'மூன்றாகப் பிரிக்கப்படும்' என்று அரசே அறிவித்திருந்த போதும்கூட தஞ்சையை இரண்டாகப் பிரிக்கப் போகிறார்களா, மூன்றாகப் பிரிக்கப் போகிறார்களா என்று தஞ்சையில் யாருக்கும் தெளிவாகத் தெரியவில்லை. இருந்தாலும் அங்கங்கே 'தனி மாவட்டக் கோஷங்கள்' கேட்க ஆரம்பித்து விட்டன.

''தஞ்சையை இரண்டாகத் தான் பிரிக்க வேண்டும். பிரித்து, நாகப்பட்டினத்தைத் தான் தலைநகராக்க வேண்டும்'' என்று அடித்துச் சொல்கிறார்கள் நாகைக்காரர்கள். ''ஏற்கெனவே 'மேல் தஞ்சை', 'கீழ்த் தஞ்சை' என்று பிரிக்கப்பட்டு, கீழ்த் தஞ்சைக்குத் தலைநகர் மாதிரி நாகை, சப் கலெக்டருடன் செயல்பட்டுக்கொண்டிருக்கும்போது, நாகையைத் தலைநகராக்க என்ன தயக்கம்?'' என்கிறார் நாகை முனிசிபல் தலைவரான ஈஸ்வரி.

''கலைஞர் காலத்திலேயே மாவட்டத் தலைநகராக நாகையை உருவாக்க எல்லா ஏற்பாடும் செய்யப்பட்டாகிவிட்டது. அதிகாரபூர்வமாக அறிவிக்கப்படவில்லையே தவிர, கீழ்த் தஞ்சையின் மையமாகச் செயல்படுகிற நாகையைத் தலைநகராக ஆக்காவிட்டால் பெரிய பிரச்னையே எழும். அரசாங்கம் 'காயிதே மில்லத்' மாவட்டம் என்ற பெயரை அறிவித்திருக்கிறது. நாகை மாவட்டத்திற்கு அந்தப் பெயரை வைப்பதில் ஏதாவது தயக்கம் இருந்தால் 'கீழ்த் தஞ்சை மாவட்டம்'



• தங்கையா.



சுப்ரமணியம்.



ஈஸ்வரி.

மேல் தஞ்சை மாவட்டம்' என்றே வைத்துவிடலாம்" என்றார் வேளாங்கண்ணியின் (தி.மு.க.) ஒன்றியத் தலைவரான எஸ்.பி. தங்கையன்.

ஒருவேளை மூன்றாகப் பிரிக்காமல் இரண்டாக மட்டும் பிரித்தால் திருவாரூர்க்காரர்களுக்குத் திருவாரூரைத்தான் மாவட்டத் தலைநகராக்க வேண்டுமென்று விருப்பமிருக்கிறது. வள்ளியம்மை மாவட்டத் தலைநகராகவே திருவாரூரை நினைத்து முதல்வரை வாழ்த்திப் போஸ்டரும் அடித்திருக்கிறார்கள் திருவாரூர்க்காரர்கள். "திருவாரூர்தான் மாவட்டத்தின் மையம். நாகையோ ஒதுங்கிப் போய் இருக்கிறது. மாயவரத்தில் உள்ளவர்கள் நாகை போய் வர அவ்வளவு வசதியாக இருக்காது. எனவே திருவாரூர்தான் தலைநகராக வேண்டும்" என்கிறார் திருவாரூர் இ. காங். காரரான சாம்பசிவம்.

"தி.மு.க. காலத்திலேயே இதைத் தலைநகராக வைத்துப் 'பூம்புகார் மாவட்டம்' என்று அமைக்க ஏற்பாடு நடந்து பைல்கள் கூடத் தயாராகிவிட்டது. அப்புறம் அ.தி.மு.க. அரசு அந்த பைல்களையே தூக்கி எங்கோ போட்டுவிட்டு இப்போது 'வள்ளியம்மை மாவட்டமாக்குகிறோம்' என்று அறிவித்திருக்கிறது. என்ன பெயர் அறிவித்தால் என்ன? தென் ஆப்பிரிக்காவில் காந்திஜிக்குத் 'துணை நின்றவர், தில்லையாடியைச் சேர்ந்த ஹரிஜனப் பெண்ணான வள்ளியம்மை. கலைஞர் அவர் நினைவாக வள்ளியம்மை நகரை உருவாக்கினார். அ.தி.மு.க. வள்ளியம்மை மாவட்டமாக்குகிறது. காயிதே மில்லத், வள்ளியம்மை ஆகிய பெயர்களை மாவட்டங்களுக்குச் சூட்டுவதைத் தி.மு.க. காரர்கள் சுலபமாக ஆட்சேபிக்க முடியாது" என்றார் திருவாரூர், தி.மு.க. பிரமுகரான ஆர். பி. சுப்ரமணியம்.

'தஞ்சாவூரிலிருந்து திருவாரூர் முப்பத்தேழு மைல். நாகப்பட்டினத்திலிருந்து பதினைந்து மைல். ஆக மையத்தில் இருப்பது திருவாரூர். இங்கு வசதிகளும் பெருகிக் கொண்டிருக்கும்போது தலைநகராக்க என்ன பிரச்னை? ஆனால் மூன்று மாவட்டங்களாகத் தஞ்சையைப் பிரித்தால் பிரச்னைதான்" என்கிறார் அ.தி.மு.க. காரரான தென்கோவன்.

மாயவரத்துக்காரர்களும் 'மாயவரத்தைத்தான் தலைநகராக்க வேண்டும்' என்ற கோஷத்தை வைக்க ஆரம்பித்திருக்கின்றார்கள். 'வள்ளியம்மை பிறந்த ஊரான தில்லையாடி மாயவரத்திற்குப் பக்கம் என்பதால் மாயவரத்தைத்தான் வள்ளியம்மை மாவட்டத் தலைநகராக்க வேண்டும். இல்லாவிட்டால் பிரச்னைதான்' என்கிறார்கள் மாயவரத்துக்காரர்கள்.

ஆக, நாகப்பட்டினம், திருவாரூர், மாயவரம், மூன்றிலும் மாவட்டத் தலைநகர்க் கோஷங்கள் எழ ஆரம்பித்திருக்கின்றன.

ஒருபுறம் கட்சிக்காரர்கள் பிரச்னைகளை வளர்க்க, இன்னொரு பக்கம் விவரம் அறிந்த அநேகர், 'அரசாங்கம் வள்ளியம்மை, காயிதே மில்லத் மாவட்டங்கள் உருவாக்கப் போகிறோம்' என்று அறிவித்ததே தவறான காரியம்" என்கிறார்கள்.

நாம் சுற்றி வந்து விசாரித்த வரையில் தஞ்சை மாவட்டத்தை இரண்டாகப் பிரித்தால் போதும் என்றவர்களே அநேகம். ஆனால் எதைத் தலைநகராக்குவது என்பதில் ஆளுக்கு ஆள் பிரிவினை. நிர்வாக வசதியைப் பொறுத்தவரையில் நாகப்பட்டினத்தில் ஒரு மாவட்டத் தலைநகர் உருவாவதற்கான வாய்ப்புகள் அதிகம். ஆனாலும் கடலோரமாக ஒதுக்கமாக இருப்பதும் 'காயிதே மில்லத்' என்ற பெயர் சூட்டுவதும் சிலர் பிரச்னைகளை எழுப்பக் காரணமாகலாம்.

நாகையோடு ஒப்பிடும்போது திருவாரூரிலும், மாயவரத்திலும் நிர்வாக வசதிகள் குறைவுதான். காயிதே மில்லத் மாவட்டத் தலைநகராக அரசு அறிவித்திருக்கும் நாகைக்கும், வள்ளியம்மை மாவட்டத் தலைநகராகப் பேசப்பட்டுக் கொண்டிருக்கும் திருவாரூருக்கும் இடைப்பட்ட தூரம் பதினைந்து மைல்தான்.

இப்படி இருக்கிற நாகையைச் சுற்றி ஒரு மாவட்டம் உருவாக்கினால் ஒரு தாலுகா அளவிலான பரப்பளவோடு அது அமையக் கூடும். மூன்றாகப் பிரித்தால், எதைத் தலைநகராக்குவது என்கிற பிரச்னைகளோடு, மாவட்ட எல்லை பற்றிய குழப்பங்களும் வரக் கூடும்.

நம்மைப் பொறுத்தவரை, அரசியல் ஆதாயங்களைக் கணக்கில் எடுத்துக்கொள்ளாமல் தஞ்சை மாவட்டத்தை இரண்டாக மட்டுமே பிரித்து தஞ்சையை ஒரு தலைநகராகவும், நாகையை ஒரு தலைநகராகவும் ஆக்கலாம். பெயர்க் குழப்பம் வரும் என்றால் 'தஞ்சை மாவட்டம்' என்று ஒன்றிற்கும் மற்றதற்கு "நாகை மாவட்டம்" என்றும் பெயர் வைக்கலாம்! இதனால் அனாவசியப் பிரச்னைகள் எழ வாய்ப்பில்லாது போய்விடக்கூடும்.

ஏற்கெனவே பிரிக்கப்பட்ட ராமநாதபுரம் மாவட்டங்களிலேயே கூட இன்னும் பல அரசாங்க அடிப்படை வசதிகள் இல்லாத நிலை. இந்த நிலைமையில் நிறைய மாவட்டங்கள், வசதிகள் இல்லாத நிலையில் உருவாவது எவ்வளவு தூரம் ஆரோக்கியமானது என்பதை சம்பந்தப்பட்டவர்கள் சிந்திக்க வேண்டும். அரசால் சுறாராக மாவட்டம் பற்றி ஒரு முடிவெடுக்கமுடியவில்லை என்றால், அரசியல் ஆதாயம்தான் முக்கியம் என்றால், மூன்றாக, நான்காகக் கூட அல்ல, எந்தெந்த ஊரில் மாவட்டக் கோஷம் கேட்கிறதோ, அதையெல்லாம் மாவட்டத் தலைநகர் என்று அறிந்துப் பெயர் பலகை மாட்டி, விழாவும் எடுத்துவிடலாம். எப்படியோ, ஊருக்கு ஊர் அநேகக் காலனிகள் உருவாகிவிட்டது மாதிரி, மாவட்டங்கள் உருவாகாமல் இருந்தால் சரி.

— ஜூலி

புகைப்படங்கள் : பானு மணாளன்.

# தலையாட்டி பொம்மைகள்

'செத்தப்புறம்கூட, நல்ல பேரு வாங்குகிற ஒரே விஷயம் கருவாடுதான்.

'என்னை மாதிரி தொண்டன்லாம் வெயில் மழை பார்க்காம, உழைச்சா, உன்னை மாதிரி தலைவன் சொகுசா தப்பு செஞ்சிட்டிருப்பீங்க....'

— சாம்பிள் வசனங்கள் படத்தின் பிரசார அவசரத்தைச் சொல்லவில்லை?

கவுண்டமணியை ஹீரோவாகப் போட்டு ரிஸ்க் எடுக்கும் இன்னொரு படம். ஆதரவான பக்கவாத்தியத்திற்காவது ஏற்பாடு செய்திருக்கலாம்.

பாண்டைக் கொஞ்சம் மடித்துக்கொண்டு, ரிக்ஷாவை மிதித்து, இரண்டு கைகளையும் வானை நோக்கித் தூக்கிப் பாடுவதில் போன ஜெனரேஷன் வெற்றி நடிகரின் பாதிப்பு இருக்கிறது. ஊர்க் குருவி ஆசை!

ஒரு குறிப்பிட்ட அரசியல் தலைவருக்கு உடல், உழைப்பு, விசுவாசம் என்று எல்லா-



வற்றையும் ஒப்படைத்து நன்றியுடன் இருந்து விட்டு, அந்தத் தலைவரின் சுயரூபம் தெரிந்து, வெகுண்டு எழுந்து பழி வாங்கும் இளைஞனாய்க் கவுண்டமணி. வாடகை ரிக்ஷா ஓட்டினாலும், ஊருக்கு நல்லவர். காதலித்துக் கல்யாணமும் நிச்சயமான நேரம் பார்த்தா! ரோடில் அநாதரவாய்க் கிடக்கும் அநாதைக் குழந்தையை அவர் கண்டெடுக்க வேண்டும்? கிடைத்த குழந்தையை வைத்துக் கொண்டு, 'யாருதுப்பா?' 'இந்தாம்மா உன்னோடதா?' என்று போகிற வருகிறவர்களிடம் கேட்டு உதை வாங்காத குறையாகக் குழந்தையை அவரே வீட்டுக்கு எடுத்து வந்து வளர்க்க, அந்தக் குழந்தைக்கு எதேச்சையாகப் பாதுகாப்புக் கொடுக்க ஒரு பெண் முன்வந்து வீட்டில் தங்க, கிசுகிசுக்கள், காதலில் விரிசல். அப்புறம் உண்மை தெரிந்து, எல்லோரும் ஒன்று சேர்ந்து 'சுபம்' போடுவதற்கு முன் க்ளைமாக்ஸ் சண்டை, கத்திக் குத்து எல்லாம் உண்டு.

பழகிப் போன ரோலில் ராதா ரவி வெகு அநாயாசமாய்ப் பொருந்துகிறார்.

இரவல் அம்மாவாய் வரும் கல்பனாவின் க்ளோஸ்—அப்களைத் தவிர்த்திருக்கலாம்.

நாயகி இளவரசி. நடிக்கச் சொல்லும் காட்சிகள் இல்லாதது அவருக்கு வரப்பிரசாதம்.

கங்கை அமரனின் இசையில் இனிமை ப்ளஸ்; புதுமை மிஸ்ஸிங்.

இண்டர்வெல்லோடு எழுந்து போகாத மகா பொறுமைசாலிகளுக்கு மட்டும் பின் பகுதியில் கொஞ்சம் கதை இருப்பது தெரியும்.

— ஜெயமன்மதன்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).

Assistant Editor: P. S. Mani. Editor: K. Rajendran.



"இப்போது, லக்ஸையும் விட நான் அதிகம் விரும்பும் சோப் ஒன்று உள்ளது", என்கிறார் ஸ்ரீதேவி.

# புதிய லக்ஸ்

**நேர்த்தியான புது மணம்**

அதன் புத்தம் புது, மலர்களின் சாற்று மணம் பற்றி ஒவ்வொரு சினிமா நட்சத்திரமும், தம் விருப்பமான முறையில் விளக்குகிறா—"மென்னைய மிக்கது," "கிளர்ச்சியூட்டுவது."

**கவர்ச்சியான புதுத் தோற்றம்**

உங்களைப் போலவே கவர்ச்சியானது நவநாகரீகமானது அது—கண்ணைக் கவர்வதும்கூட! மூன்று வகை அழகிய வண்ணங்களில் கிடைக்கிறது—இளஞ் சிவப்பு, பச்சை மற்றும் மஞ்சள்.












புதிய
லக்ஸ்
சினிமா நட்சத்திரங்களின் அழகு சோப்.

